உ

திருச்சிற்றம்பலம்

# சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேற்குகோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற



## குமரகோட்டம் ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி

# கும்பாபிஷேக விழா மலர்

நாள்: 11.02.2019 – திங்கள்கிழமை

உ

திருச்சிற்றம்பலம்



சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில்
மேற்குக் கோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற
குமரகோட்டம் ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத
ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி

# கும்பாபிஷேக விழா மலர்

நாள் : 11.02.2019 - திங்கள்கிழமை

நூல் தொகுப்பும், பதிப்பும் :
சிவநெறிச்சுடர். தி. பொன்னம்பலம்



# விநாயகர் துதி

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்

பெருவாக்கும் பீடும் பெருக்கும் – உருவாக்கும்

ஆதலால் வானோரும் யானை முகத்தானைக்

காதலால் கூப்புவர்தம் கை.

| வ.எண் | பொருளடக்கம் | பக்கம் எண் |
|---|---|---|
| 1 | பதிப்புரை | 3 |
| 2 | நன்றி மலர்கள் | 5 |
| 3 | ஆசி உரை | 7 |
| 4 | வாழ்த்துரை | 8 |
| 5 | வாழ்த்தியல் பாராட்டிதழ் | 10 |
| 6 | பட்டாபிஷேக வாழ்த்தியல் | 11 |
| 7 | திருப்பணி வரலாறு | 13 |
| 8 | தேவசேனாபதிக் கடவுள் | 16 |
| 9 | குமாரதந்திரம் | 17 |
| 10 | கலைக்கோயில் | 22 |
| 11 | சித்தாந்த நடனம் | 29 |
| 12 | ஆறுமுகமான பொருள் | 34 |
| 13 | தில்லைச் சிதம்பரம் – நித்திய வழிபாடுகள் | 35 |
| 14 | திருமுருகாற்றுப்படை | 38 |
| 15 | திருமுருகன் திருப்புகழ் | 41 |
| 16 | புதுவையில் திருவாசகம் | 46 |
| 17 | உனது அடியாராகிய மோன ஞானிகளுடனே சேரவும் அருள்வாயே! | 51 |
| 18 | கார்த்திகைதீபம் சொக்கர்பனை | 54 |
| 19 | நடராஜர் உலா–நமக்கு தெரியுமா? & திருவாரூர்ச் செப்பேடுகள் | 57 |
| 20 | காவடி எடுப்பது ஏன்? | 61 |
| 21 | ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் சரித்திரம் | 62 |
| 22 | குமாரஸ்தவம் | 66 |
| 23 | ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமி அருளிய சித்திரக்கவி | 70 |
| 24 | சிதம்பரம் தலச்சிறப்புகள் | 71 |
| 25 | மேலைக் கோபுர வாசலில் மேவிய ஸ்ரீ செல்வமுத்துக்குமார ஸ்வாமி | 73 |
| 26 | நவவீரர் பாடல்கள் | 74 |
| 27 | பொன்மொழிகள் | 76 |
| 28 | தில்லைப் பெருங்கோயிலில் செங்குந்தர் நிகழ்த்தும் உற்சவங்கள் | 77 |
| 29 | திருப்புகழ் அமிர்தம் | 82 |
| 30 | திருமுருகவேள் பன்னிரு திருமுறைகள் | 84 |
| 31 | வாரி வழங்கும் வாரியார் | 85 |
| 32 | குமரன் திருக்கோயில்கள் | 86 |
| 33 | தில்லை அம்பலவாணரை வழிபட்டுப் பேறுபெற்றோர் | 91 |
| 34 | மங்கல வாழ்த்து | 92 |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

**கனகசபை மேவு எனது குருநாத**

**கருணை முருகேசப் பெருமாள் காண்**

சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேற்குக் கோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற குமரக்கோட்டம் ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத செல்வ முத்துக்குமார ஸ்வாமி திருவருள் எங்கும் என்றென்றும் மன்னிப் பொலிவதாகுக.

கந்தசஷ்டி சூரசம்ஹாரப் பெருவிழா மங்கலப் பொலிவுடன் நிகழ்கின்ற குமரகோட்டத்திற்கு 11.02.2019-இல் நிகழும் திருக்குடமுழுக்குப் பெருவிழாவிற்கு மேலும் பொலிவு சேர்க்கும் வகையில் குடமுழுக்கு விழா மலர் வெளியிடத் திருவருள் கூட்டுவித்துள்ளது.

ஸ்ரீமந் ஆனந்த நடராஜராஜர் திருவருளால் சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் மற்றும் டிரஸ்டி, பெருந்திருவினர் சிவத்திரு. **Dr. தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கள் திருப்பணியையும், கும்பாபிஷேகத்தையும் உபயமாகச் செய்து மகிழ்கின்றார்கள். குடமுழுக்கு விழா மலரைப் பதிப்பிக்கும் நற்பணி வாய்ப்பை அவர்கள் எனக்கு அளித்துப் பெருமை தந்துள்ளார்கள்.

தில்லைப் பெருங்கோயில் வரலாறு, இலக்கியம், கலை, சமயநுட்பங்கள், அரிய செய்திகள் குறித்த பல கட்டுரைகளும், வழிபாட்டுப் பாடல்களும், வண்ணமிகு ஒளிப்படங்களும் இந்நூலின்கண் இடம் பெற்றுள்ளன. பேரறிஞர் பெருமக்களும், சான்றோர்களும் இக்கட்டுரைகளைப் படைத்து அளித்துள்ளனர்.

இம்மலர் வனப்புற வெளிவர உதவிய பெரியோர்கட்கும், கட்டுரைகளை எழுதியுதவிய அறிஞர்கட்கும், நட்டாண்மைத் தலைவர் திருப்பணி செம்மல் **Dr.தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கட்கும் என்னுடைய நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்வடைகின்றேன்.

இம்மலருக்கு வாழ்த்துரைகளையும், ஆசியுரைகளையும் வழங்கிய பெருமக்களுக்கு நன்றியும் வணக்கமும் என்றென்றும் உரியதாகும். திருக்குடமுழுக்கு விழா மலர்ப் பதிப்பில் எனக்கு பல்லாற்றானும் உதவிகரமாக விளங்கிய பொறியாளர் சிவத்திரு. **S. சிவசங்கரன் செங்குந்தர்**, தொண்டன். சிவத்திரு **CP.K.ஸ்ரீதரன் செங்குந்தர்**, சிவத்திரு **க. தில்லைகோவிந்தன் செங்குந்தர்** ஆகியோருக்கும் நன்றியையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சிறப்பு வாய்ந்த ஜனகம் அச்சகம் இம்மலரை வெளியிடும் பணியை அன்புடன் ஏற்றுக் கொண்டு, எழிலும் பொலிவுமிக்க கருத்துக் கருவூலமாக அச்சியற்றித் தந்துள்ளது. ஜனகம் அச்சகம் சிவத்திரு. D. ரமேஷ் **செங்குந்தர்** அவர்கட்கும், சிவத்திரு. D. **சுதாகர் செங்குந்தர்** அவர்கட்கும் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

தெய்வத்தமிழ் மணங்கமழும் இம்மணமிகு எழில்மலரை வேழமங்கை வேடமங்கை உடனாகிய ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப் பெருமான் திருவடித்தாள் மலர்களில் சமர்ப்பித்து வணங்குகிறோம்.

இக்கும்பாபிஷேக மலரை ஆன்மிக அன்பர்களும், சைவத் தமிழுலகும் ஏற்றுப் பயன்கொள்ள அவனருளாலே அவன்தாள் வணங்குகின்றனம்.

**பணிவன்புடன்...**

(தி. பொன்னம்பலம்)

சிதம்பரம்

30.01.2019

உ

திருச்சிற்றம்பலம்

## நன்றி மலர்கள்

ஏறுமயி லேறிவிளை யாடும்முகம் ஒன்றே
ஈசருடன் ஞான மொழி பேசும்முகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்கும்முகம் ஒன்றே
குன்றுருவவேல் வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம் அமர்ந்த பெருமாளே!

ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேலைக் கோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத செல்வ முத்துக்குமார ஸ்வாமி திருக்கோயில் மகா கும்பாபிஷேகம் ஸ்ரீ சிவகாமியம்மை உடனாகிய ஸ்ரீமந் ஆனந்த நடராஜராஜர் திருவருளால் சிறப்புற நிகழ்ந்தது. இதனை ஸ்ரீ சபாநாயகர் கோயில் பொதுதீக்ஷிதர்கள் சார்பாக நடத்திய பிரம்மஸ்ரீ. **முத்து ராஜாமணி தீக்ஷிதர்** அவர்கட்கும், அவர்தம் திருக்குமாரர்கள் பிரும்மஸ்ரீ **சண்முக சுந்தர தீக்ஷிதர்** அவர்கட்கும், பிரம்மஸ்ரீ பாபு **தீக்ஷிதர்** அவர்கட்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குமரக்கோட்டம் கும்பாபிஷேகத்தை முன்னிட்டு வெளியிடப் பெறும் பக்தி மணங்கமழும் இம்மலரைச் சிறப்பாகத் தொகுத்தும், பதிப்பித்தும் வழங்கிய சிவநெறிச்சுடர் டாக்டர் **தி. பொன்னம்பலம் செங்குந்தர்** அவர்கட்கும் நன்றி தெரிவித்து மகிழ்கிறேன்.

கும்பாபிஷேகத்திற்கும், விழா மலருக்கும் உரிய ஏற்பாடுகளைச் செப்பமுறச் செய்து உதவிய திரு.**Er.S. சிவசங்கரன் செங்குந்தர்** அவர்கட்கும், திரு.**C.P.K. ஸ்ரீதரன் செங்குந்தர்** அவர்கட்கும், திரு.**D. ரமேஷ் செங்குந்தர்** அவர்கட்கும், திரு.**K. சபேசன் செங்குந்தர்** அவர்கட்கும் , திரு.**D. சுதாகர் செங்குந்தர்** அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

திருக்குடமுழுக்கு விழா மலரை எழில்மிகு வண்ண மலராகக் குறித்த நேரத்தில் அச்சியற்றித் தந்த ஜனகம் அச்சகத்தாரின் பணி பாராட்டுதலுக்கு உரியதாகும்.

திருப்பணிக்கும், கும்பாபிஷேகத்திற்கும், மலர்ப்பதிப்பிற்கும் உரிய ஒத்துழைப்பினை நல்கிய அனைவருக்கும் ஸ்ரீ செல்வ முத்துக் குமார ஸ்வாமியின் திருவருள் இகபர நலன்களை அருளிட அவனருளாலே அவன் தாள் வணங்குகின்றேன். நன்றி!

**அன்புடன்...**

தில்லை ராஜ் நடராஜன்

**(தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்)**

உ
சிவமயம்

முத்து ராஜாமணி தீக்ஷிதர்
கோவில் டிரஸ்டி & பூஜை
71/27, மாலைக்கட்டி தெரு,
சிதம்பரம் - 608 001.



Muthu. Rajamani Deekshidar
Temple Trustee & Poojai
71/27, Malaikatti Street,
Chidambaram - 608 001.

यस्मात् सर्वं समुपिन्नं चराचरमिदं जगत्
इदं नमो नटेशाय तस्मै कारुण्य मूर्तये

உலகெலாம் உணர்ந்தோதர்க்கரியவன்
நிலவுளாவிய நீர்மலி வேணியன்
அலகிற் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

## ஆசி உரை

எல்லாம்வல்ல ஸ்ரீ சிவகாமசுந்தரி ஸமேத ஆனந்த நடராஜர் பெருமான் ஆலயத்தின் மேற்கு கோபுர வாயிலில் எழுந்தருள்புரியும் குமரகோட்டம் ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி கும்பாபிஷேகத்தில் வெளிவரும் இம்மலர் பல நுண்ணிய ஆன்மிகக் கருத்துக்களையும், வழிபாட்டு பாடல்களையும், இதுவரை அறிந்திராத நற்செய்திகளையும் கொண்டிருக்கிறது.

இந்த கும்பாபிஷேகமானது ஸ்ரீ ஸபாநாயகர் கோயில் எமது பொது தீக்ஷிதர்கள் ஆசியுடனும், அனுமதியுடனும் சீரும் சிறப்புமாக நடைபெறுகிறது. இந்த கும்பாபிஷேகத்தையொட்டி ஸ்ரீ குமரகோட்ட ஆலயத்தின் முகப்பில் புதிதாக R.C. மண்டபம், சுதை வேலைகள், ஆலய திருப்பணிகள் மற்றும் கும்பாபிஷேகம் இவை யாவும் சிதம்பரம், தெற்குத் தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மை தலைவர் & டிரஸ்டி சிவத்திரு. **Dr.தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கள் மிகவும் சிரத்தையுடனும், பக்தியுடனும் சீரும் சிறப்புமாகச் செய்துள்ளார்கள்.

இந்த திருப்பணி மற்றும் கும்பாபிஷேக உபயதாரர், தெற்குத் தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி சிவத்திரு. Dr.தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர் அவர்களும், அவர்தம் குடும்பத்தார்களும் வாழ்வாங்கு வாழ எல்லாம்வல்ல ஸ்ரீ நடராஜப் பெருமானை பிரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு

முத்து. ராஜாமணி.

**முத்து. ராஜாமணி தீக்ஷிதர்**
தெற்குத் தெரு செங்குந்தர் மரபினர்
கட்டளை தீக்ஷிதர்

சிதம்பரம்
11.02.2019

ஸ்ரீ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்




## ஸ்ரீ மௌன மடாலயம்

39, சபாநாயகர் தெரு, சிதம்பரம் - 608 001.
04144 - 222075


**ஸ்ரீலஸ்ரீ மௌன.சுந்தரமூர்த்தி சுவாமிகள்** **நாள் : 11.02.2019**

**சிற்சபை பொலியத் திருநடம் புரியும்**

**அற்புதக் கூத்தன் அடியிணை மறவாத**

திருவாளர்.டாக்டர்.Dr.**தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கட்கு சிவஞானப் பெருஞ்செல்வம் முதலிய எல்லா நலன்களும் மேன்மேலும் உளவாகுக!

சிதம்பரம் தெற்குத் தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவராக இருந்து சிவநெறியும், மனிதநேயமும் கடைப்பிடித்து தொண்டாற்றி வரும் தாங்கள் ஸ்ரீ சபாநாயகர் கோயில் கொடியேற்றம், திருக்கார்த்திகை தீபம், செல்வ முத்துக்குமாரப் பெருமான் கோயில் கந்தசஷ்டி சூரசம்ஹாரம் முதலிய உற்சவங்களைப் பக்தி சிரத்தையோடு நிகழ்த்தி வருகின்றீர்கள்.

ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேற்குக் கோபுர ஸ்ரீ செல்வ முத்துக் குமாரப் பெருமான் எழுந்தருள் புரிகின்ற குமரகோட்டத் திருப்பணியை செப்பமுற நிறைவேற்றி 11.02.2019-இல் திருக்குடமுழுக்கு நல்விழானையும் உபயமாக நிகழ்த்துகின்றீர்கள்.

கும்பாபிஷேக வைபவம் சீரும் சிறப்புமாகப் பொலியவும், கும்பாபிஷேகத்தினையொட்டி வெளியிடப் பெறும் கலை மலிந்த நன்மலர் சிறக்கவும், எல்லாம்வல்ல ஸ்ரீ சிவகாமியம்மை உடனாகிய ஸ்ரீமந் ஆனந்த நடராஜப் பெருமான் திருவருளையும், ஸ்ரீ மௌன தேசிகர் குருவருளையும் நீளநினைந்து வாழ்த்துகின்றனம்.

மௌன சுந்தரமூர்த்தி சுவாமிகள்

# வாழ்த்துரை

- புரவலர். வேதாந்தபாரதி
டாக்டர்.கு.பழநிவேலு செங்குந்தர்
வாணி பார்மஸி, சிதம்பரம்.

வைத்தியநாதருக்கும், தையல்நாயகிக்கும் செல்லப் பிள்ளையான முருகன், நாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள வைத்தீஸ்வரன் கோவிலில் செல்வ முத்துக் குமார சுவாமியாக அருள்பாலிக்கிறார்.

இக்கோவிலில் வைத்தியநாதரை விட முத்துகுமாரருக்கே செல்வாக்கு அதிகம். செவ்வாய் தோஷம் நீங்க இவரை வழிபடுகின்றனர் பெண்கள். சூரபத்மனை அழிப்பதற்காக இத்தல இறைவனை பூஜித்து வரம் பெற்றுள்ளார் முருக பெருமான்.

தினமும் காலை மற்றும் அர்த்தஜாம பூஜையின் போது முதலில் முருகனுக்கு பூஜை செய்த பிறகே, சிவனுக்கும், அம்மனுக்கும் பூஜை நடைபெறும். அர்த்தஜாம பூஜையில் செல்வ முத்துக்குமாரருக்கு புனுகு, பச்சைக் கற்பூரம், சந்தனம், எலுமிச்சை, பன்னீர், புஷ்பம், பால் சாதம் மற்றும் பால் அபிஷேகம் நடைபெறும். முருகன் திருவடியில் சாத்தப்படும் சந்தனத்தை வாங்கி சாப்பிட்டால் குழந்தை பாக்கியம் உண்டாகும். திருநீறு நோய் தீர்க்கவல்லது.

முத்துக்குமார சுவாமிக்கு தை மாதம் செவ்வாய்கிழமை ஆரம்பித்து 10 நாட்கள் விழா நடக்கும். முருகனுக்கு முக்கியத்துவம் உள்ள தலம் என்பதால் இங்கு அனைத்து விழாக்களும் முத்துக் குமார சுவாமிக்கு தான்.

இதேபோல் சிதம்பரத்தில் குமரகோட்டத்தில் எழுந்தருள் புரிகின்ற குமரப் பெருமானுக்கு செல்வாக்கு அதிகம். பரிபூரண வரப்பிரசாதியாகிய முத்துக்குமர சுவாமி சத்புத்திர சந்தான பாக்கியம் அருளும் பெருங்கருணையாளன். கந்தசஷ்டி உற்சவத்தின் போது தீமையை அடக்கி நன்மையை விளங்கச் செய்யும் சூரசம்ஹார மூர்த்தியும் இவரே. ஸ்ரீ குமரகோட்டம் திருப்பணியையும், கும்பாபிஷேகத்தையும் நிகழ்த்தும் செங்குந்தர் நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி சிவத்திரு.தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தரும், அவர்தம் நல்ல குடும்பமும், செங்குந்த மரபினரும், எல்லா நலன்களையும் பெற்றுச் சிறந்திட ஸ்ரீமந் ஆனந்த நடராஜர் எடுத்த பொற்பாதத்தை வணங்கி வாழ்த்துகிறேன்.

அன்புடன் ...

கு. பழநிவேலு செங்குந்தர்

சிதம்பரம்



உ

திருச்சிற்றம்பலம்

நமோ குமராய

**கும்பாபிஷேகத் திருநாள் : விளம்பி வருடம் தை - 28 (11.02.2019) திங்கள்கிழமை**

வேடமங்கை வேழமங்கையுடனாகிய ஸ்ரீ செல்வமுத்துக்குமார ஸ்வாமி எழுந்தருளி திருவருள்பாலிக்கும் குமரக்கோயில் என்றழைக்கப்பெறும் ஸ்ரீ குமரகோட்டம் திருப்பணியையும், திருக்குடமுழுக்கு விழாவையும் நன்கினிது நிகழ்த்தி மகிழும் சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி சிவத்திரு.டாக்டர். **தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கட்கு, சிதம்பரம் செங்குந்தர் இளைஞர் சங்கத்தார் மகிழ்ந்தளித்த

## வாழ்த்தியல் பாராட்டிதழ்





பொன்பெரிது பொலிக! நெல்பெரிது சிறக்க!
பொன்னம் பலத்துக் கூத்துடை வள்ளல்
இன்னருள் நலத்தால் இனியவை மலர்க!
திருவார் செம்மல் செங்குந்தர் தலைவர்
மலர்தலை யுலகத்து மக்கள் மகிழ்ந்திட
தொலைக்காட்சி வண்ணம் தோன்றிடும் வண்ணம்
அறிவியல் டிஜிட்டல் ஃபார்முலா கண்ட
தில்லையூர் **தில்லை** **ராஜ்நட** **ராஜன்**
இல்லற மேன்மைச் **சாந்தி** தம்மொடு
வளமார் வாழ்வில் வாழிய! இனிது
மேலைக் கோபுரக் குமர கோட்டம்
கோலச் சிறப்பின் முகப்பு மண்டபம்
பாங்குடன் புதிதாய்ச் சிற்பந் திகழ
வண்ணம் பொலிய அமைத்தனை வாழி!
வேள்விச் சாலை ஹோமம் வேட்டிட
சஷ்டி மண்டபம் சமைத்தனை வாழி
குமர கோட்ட விமானந் தன்னை
அமரரும் வியக்க அனைவரும் நயக்க
அழகுடைத் தாகப் புதுக்கினை வாழி!
செல்வம் பொலியும் சிற்றம் பலத்து
மேற்றிசை தன்னில் உதயம் நோக்கி
எல்லா வுலகும் இன்புற் றிருக்கத்
திருவருள் பொலியும் குமாரக் கடவுள்
திருக்கோயில் சிறந்த குடமுழுக் கதனை
பெருகிய பக்தித் திறத்தால் நிகழ்த்தி
பெரும்புகழ் கொண்ட அருந்திறல் தலைவர்
செங்குந்த இளைஞர் சங்கப் புரவலர்
**தில்லை** **ராஜ்நட** **ராஜன்** தம்மை
மனமொழி மெய்களால் போற்றி மகிழ்ந்தனம்
அன்னைசிவ காமி ஆடலங் கூத்தன்
தேனொத்து இனிக்கும் திருவருள் நலத்தால்
மன்னிய சிறப்பொடு மனமகிழ் நலத்தொடு
இன்னும் பற்பல இனியநல் லாண்டுகள்
மன்பதை உய்ந்திட தொண்டுகள் ஆற்றி
வாழிய இனிது வாழிய நலனே!

சிதம்பரம்
09.02.2019

*பணிவன்புடன் வாழ்த்தி வணங்கும்...*

**செங்குந்தர் இளைஞர் சங்கம்**, சிதம்பரம்



உ

வேலும் மயிலும் துணை

**துந்துபி ஆண்டு கார்த்திகைத் திங்கள் ஆறாம் நாள் திங்கட்கிழமை (22.11.1982)**

**அருள்மிகு சபாநாயகர் திருக்கோயில்**

**வேதத்தோன் முதலாகிய தேவர்கள் பூஜித்தே தொழ புலியூரினில் மேலைக்கோபுர வாசலில் எழுந்தருளியுள்ள அருள்மிகு குமரப் பெருமான் வள்ளி தேவசேனா உடனாகும் பொருட்டு திருக்கல்யாணம் கொண்டருளும் திருநாளாகும். அன்று காலை சிற்றம்பலத்தெங்கள் செல்வப் பெருமான் திருவருளால்**
நமது செங்குந்தர் பரம்பரையின் வாழையடி வாழையென வந்த மரபின்படி
சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் குலத்தின் பரம்பரை நாட்டாண்மை

திருமிகு. **ப.தி.கு. தில்லைக்கோவிந்த முதலியார்** அவர்களின்

திருமகனார் நிறைநாட்செல்வர்

## திருமிகு. **தி. நடராஜ முதலியார்** அவர்கள்

சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் நாட்டாண்மைக்கு இளவரசராகப் பட்டமேற்கின்றார்கள்
அருள்மிகு சபாநாயகர் சந்நதியில் பஞ்சாட்சரத் திருக்களிற்றுப்படியில் அமர்த்தி அன்னாருக்கு
தில்லை வாழந்தணர்கள் சங்காபிஷேகம் செய்வித்து இளவரசுப்பட்டம் சூட்டிய ஞான்று
**சிதம்பரம் செங்குந்த மரபினர்கள் மனமொழி மெய்களால் ஆசி வழங்கி வாழ்த்திய**

## <u>பட்டாபிஷேக வாழ்த்திதழ்</u>

பொன்பெரிது பொலிக! நெல்பெரிது சிறக்க!
பொன்னம் பலத்துக் கூத்துடை வள்ளல்
இன்னருள் நலத்தால் இனியவை மலர்க!
அணிமயி லமரும் ஆறுமுகச் செவ்வேள்
அருகினி லுறையும் ஆற்றலஞ் செல்வர்
வீரவாகுவாம் பெரும் பெயர் நல்லோர்
தோன்றிய நற்குடி துகளறு பெருங்குடி
குந்தமும் புலியும் சேவலும் பொறித்த
வெற்றித் துவசம் உயர்த்திய திருக்குடி
திருவளர் தில்லைக் கோவிந்த முதலியார்
பெருமைத் தலைமையில் பொலியும் பெருங்குடி
செங்குந்தம் என்னும் நற்குடி **வாழிய!**
**தில்லைக் கோவிந்த முதலியார்** குமாரர்
அயற்புலக் கல்வி மயக்கறத் தெளிந்த
**நடராச முதலியார்** நன்றே **வாழிய!**
அம்பலக் கூத்தர் அருட்டிரு முன்னர்
பஞ்சாட்சர மெனும் வெள்ளியம் படியில்
சங்காபி டேகம் கொண்டினி திருக்கும்
ளங்கள் குலத்தின் ஏரார் செம்மால்
சோழர்தம் குடிக்கு திருமுடி சூட்டும்
பொற்புடை அந்தணர் நுந்தமக் கின்று
சங்காபி டேகம் செய்தனர் வாழி!
ஆண்டுபல் லாண்டுகள் அவனியிற் சிறந்து
பிறந்த குலத்தின் பெருமையை உயர்த்தி
வாழிய **இனிது!** வாழிய **இனிதே!**

*அன்புடன்...*

**தெற்குத்தெரு செங்குந்தர் மரபினர்கள்.** சிதம்பரம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேற்குக் கோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற

## குமரகோட்டம் ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத
## ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி கோயில்

## திருப்பணி வரலாறு

பூலோக கைலாயமாகிய சிதம்பரத்தில் ஸ்ரீ சிவகாமியம்மை உடனாகிய ஆனந்த நடராஜப் பெருமான் திருநடம் புரிகின்ற ஸ்ரீ சபாநாயகர் கோயில் மேற்குக் கோபுர வாயிலில் கிழக்கு நோக்கி எழுந்தருள் புரிகின்றார் வேழமங்கை வேடமங்கை உடனாகிய வேலவர். இப்பெருமான் **"முத்துக் குமரப் பெருமான்"** என்று சிவநேயச் செல்வர்களால் போற்றி வணங்கப் பெறுகின்றார். இக்கோயில் **"குமரகோட்டம்"** என்று குறிக்கப் பெறுகின்றது. **"குமரகோயில்"** என்பது மக்கள் சொல்வழக்கு.

ஸ்ரீ சபாநாயகர் கோயில் பொது தீக்ஷிதர்களின் நிர்வாகத்திற்கு உட்பட்ட இக்கோயிலில் ஆண்டுதோறும் கந்தசஷ்டி உற்சவம், திருகார்த்திகை தீபத்திருநாள் உற்சவம் என புகழ்வாய்ந்த உற்சவங்களை கோலாகலத்துடன் தெற்குத்தெரு செங்குந்தர் மரபினர் நிகழ்த்தி வருகின்றனர்.

பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த சந்தத் தமிழ்க் கவியாகிய அருணகிரிநாதர் சிதம்பரத் தலத்தை அருட்கண்ணால் தரிசித்துப் பல திருப்புகழ்ப் பாடல்களில் துதித்துள்ளார். இப்போது கிடைக்கப் பெற்ற பாடல்கள் அறுபத்து ஏழு ஆகும். இப்பாடல்களில் பல மேலைக் கோபுர வாயிலில் மேவிய முத்துக்குமரப் பெருமானைப் போற்றிப் பரவுகின்றன.

**"தில்லை மேலைக் கோபுர மேவிய பெருமாளே"**
**"மேலைக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே"**
**"மேருமால் வரை யென நீள் கோபுர**
**மேலை வாயிலின் மயில்மீ தேறிய பெருமாளே"**
**"மேலைக் கோபுரத்து மேவிக் கேள்விமிக்க**
**வேதத்தோர் துதித்த பெருமாளே"**

என்னும் பாடலடிகளால் இதனை இனிது உணரலாம்.

அருணகிரிநாதரால் பாடப்பெற்ற இக்கோயில் அவர் வாழ்ந்த பதினான்காம் நூற்றாண்டுக்கு பன்னூறு ஆண்டுகட்கு முன்பிருந்தே மக்கள் வழிபாட்டில் இருந்துள்ளது என்பது தெரிய வருகிறது. இதனால் இக்குமரகோட்டத்தின் தொன்மை நன்குணரப்பெறும்.

கால மாறுபாட்டாலும், அந்நியர் படையெடுப்பாலும் சிதலமடைந்திருந்த இக்கோயில் 01.02.1956-இல் சிதம்பரம், பெருமாள் தெரு அறுவை (ஜவுளி) வணிகர் சிவத்திரு.**தண்டபாணி முதலியார்** அவர்கள் மிக்கபொருட்செலவில் புதுப்பித்துத் திருப்பணி செய்து, மகா கும்பாபிஷேகத்தினையும் உபயமாக நிகழ்த்தினார்.

மேலைக் கோபுரத்தில் கோஷ்ட மூர்த்தியாக மயில் வாகனப் பெருமானாகத் தரிசனம் தருகின்ற இப்பெருமான் கருவறையில் வள்ளி தேவசேனா சமேதராக இருந்து அருள்பாலிக்கின்றார். இப்பெருமானின் அழகுத் திருக்கோலம் காணக் கண்கோடி வேண்டும். வலப்புறத்தில் சிங்க வாகனத்தில் ஐந்து முகங்களையுடைய ஹேரம்ப விநாயகர் எழுந்தருள் புரிகின்றார். வலப்புறத்தில் வடக்கு நோக்கி மகா கணபதி வீற்றிருந்தருளுகின்றார். அவரையடுத்து, வீரவாகுதேவர், வீரமார்த்தாண்டர், வீரராகக்கதர், வீரமகேந்திரர், வீரதீரர், வீரமகேச்சுரர், வீரகேசரி, வீரபுரந்தரர், வீராந்தகர் ஆகிய நவவீரர்கள் போர்க்கோலம் பூண்டு எழுந்தருள்கின்றனர். வலப்புற கோஷ்டத்தில் என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்ட அகத்திய முனிவர் இருந்தருள்கின்றார். கருவறைச் சுவர்களின் இருப்புறத்திலும் புடைப்புச் சிற்பமாக துவாரபாலகர்கள் காட்சியளிக்க, அவர்கட்கு முன்னால் கம்பீரமான எழில்தோற்றத்தோடு ஆறடி உயரத்தில் துவாரபாலகர்கள் காட்சியளிக்கின்றனர். இக்கோயிலில் நான்கு துவாரபாலகர்கள் அமைந்திருப்பது குறிக்கத்தக்கது. குமரப் பெருமானின் முன்னர் அவரை தரிசித்தவாறு தேவமயில் அசுரமயில் என இரண்டு மயில்கள் அமைந்திருப்பது எங்கும் காணக்கிடைக்காத திருவருள் காட்சியாகும். கருவறையின் இடப்புற கோஷ்டத்தில் மகா சரஸ்வதியாகிய சகல கலாவல்லி எழுந்தருள் புரிகின்றார். அவருக்கு அருகே குகைபோன்ற குடைவரைப் பகுதியில் **நான்முகன்** தரிசனம் தருகின்றார். பிரணவப் பொருள் கூறாத பிரமனை குமரப்பெருமான் தகையில் குட்டிச் சிறைவைத்த புராண வரலாற்றை இது குறிப்பதாக அறிஞர் கூறுவர்.

குமரப் பெருமானிடம் பிரமனை மன்னித்துச் சிறை விடுதலை செய்யுமாறு வேண்டுவதாகவே சரஸ்வதி தேவியின் படிமம் அமைந்திருப்பதாகவும் சொல்லப்பெறுகிறது. இடப்புற சுற்றுச் சுவரில் தெற்கு நோக்கி கூப்பிய கைகளுடன் அருணகிரிநாதர் குருநாதராக இருந்து அருள்கின்றார்.

1987-ஆம் ஆண்டு சபாநாயகர் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்ற போது முன்னதாக குமரகோட்டப் பெருமானுக்கு திருக்குடமுழுக்கு சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் மரபினரால் நாட்டாண்மைத் தலைவர் சிவத்திரு.P.T.K.**தில்லை கோவிந்த செங்குந்தர்** அவர்களின் முன்னிலையில் சிறப்புற நிகழ்ந்தது. இதனை 1987-ஆம் ஆண்டு கும்பாபிஷேக மலரில் புலவர் **த. முருகேசனார்** அவர்கள் இயற்றிய இயன்மொழி வாழ்த்து

> **"மேலக் கோபுர மருகில் வீற்றிருக்கும்**
> **குமர கோட்டக் குடமுழுக்கைக்**
> **கோலமுடன் செய்திட்ட செங்குந்த மரபினர்கள்**
> **குலவி வாழ்க"**

எனப் பாராட்டிக் குறித்துள்ளது.

குமரகோட்டக் கோயிலைப் புதுப்பித்து ,வண்ணமயமாக்கி எழில்பெருகத் திருப்பணி செய்து சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி பெருமைக்குரிய சிவத்திரு.**தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கள் புகழ்வாய்ந்த புனிதமிகு குடமுழுக்கை நிகழ்த்தினார்கள். 05.06.1998-ஆம் நாளில் நடைபெற்ற இக்கும்பாபிஷேக விழா பெருஞ்சிறப்புடன் நிகழ்ந்தது.

குமரகோட்டத்துக்கு வடபால் சஷ்டி உற்சவத்தின் போது பயன்படத்தக்க வகையில் யாக சாலை மண்டபம் ஒன்றும் 2000-இல் புதிதாக கட்டி அர்ப்பணிக்கப்பட்டது. இத்திருப்பணியின் போது கோயிலுக்கு முன்னால் தகரக் கொட்டகை ஒன்று புதிதாக அமைக்கப் பெற்றது. இயற்கைச் சீற்றங்களினால் இது சிதலமடைந்த போதெல்லாம் சிறுசிறு சரிபார்ப்புகள் செய்யப்பட்டு சீர் செய்யப்பெற்று வந்தது.

2011-இல் வீசிய தானே புயலால் இது மேலும் பழுதாகிட அதனை முற்றுமாக நீக்கிவிட்டு பொது தீக்ஷிதர்களின் அனுமதியுடன் சிதம்பரம் தெற்குத் தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி சிவத்திரு. டாக்டர்.**தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கள் மிக்கபொருட்செல்வில் ஒட்டுக் கட்டடமாகப் புதிய மண்டபத்தை நிர்மாணித்து அர்ப்பணித்துள்ளார்கள். கட்டளை தீக்ஷிதர் பிரம்மஸ்ரீ **முத்து ராஜாமணி தீக்ஷிதர்** அவர்கள் மிகுந்த ஈடுபாட்டோடு முன்னின்று இத்திருப்பணியை நிறைவேற்றியுள்ளார்கள்.

முன் மண்டபத்தில் வள்ளி தேவசேனா சமேத ஆறுமுகக் குமரன் மயில் வாகனத்தில் எழுந்தருளிக் காட்சி தரும் சுதை வடிவம் மிக்க அழகோடு பொலியக் காணலாம். மண்டப முகப்பில் இருபுறங்களிலும் பூதகணங்களும், வண்ணமிகு மயில்களும் அமையப் பெற்று காட்சித் தேனாக விளங்கக் காணலாம். சிற்பி திருமிகு. **தியாகராசன் ஸ்தபதியார்** அவர்களின் கலைமிகு சுதைவண்ணம் போற்றும் வண்ணம் உள்ளது. கோயில் முழுவதும் குழல் விளக்குகளாலும், மின் விளக்குகளாலும் ஒளிமயமாகப் பிரகாசிக்கும்படி திருப்பணி செய்யப் பெற்றுள்ளது.

இத்தகுச் சிறப்பு வாய்ந்த திருப்பணிகள் நிறைவு பெற்று, ஆறுகால யாக பூசைகள் வைதீக முறையில் மிகச் சிறப்பாக நிறைவேற்றப் பெற்று, நிகழும் விளம்பி வருடம் தை மாதம் 28-ஆம் நாள் **(11.02.2019) திங்கட்கிழமை** காலை 9.00 மணிக்குமேல் 10.00 மணிக்குள் **ஸ்ரீ வள்ளி தேவசேனா ஸமேத ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி** மங்கலம் பொலியும் குமரகோட்டத் திருக்கோயிலில் வீற்றிருந்து **மகா கும்பாபிஷேகம்** கண்டருளுகின்றார்.

திருச்சிற்றம்பலம்

# தேவ சேனாபதிக் கடவுள்

- க. தில்லை கோவிந்தன் செங்குந்தர் B.Com.

தேவசேனாபதிக் கடவுளாகிய குமாரக் கடவுள் அசுரர்களை எதிர்த்து மூன்று இடங்களில் போர் புரிந்தார்.

கடற்படை : கடலிலே போர் புரிந்த தலம் திருச்செந்தூர்.

தரைப்படை : நிலத்திலே போர் புரிந்த தலம் திருப்பரங்குன்றம் .

வான்படை : விண்ணிலே போர் புரிந்த தலம் திருப்போரூர்.

மாயை அடங்கிய இடம் திருச்செந்தூர்.

கன்மம் அடங்கிய இடம் திருப்பரங்குன்றம்.

ஆணவம் அடங்கிய இடம் திருப்போரூர்.

பக்தி வழிபாட்டினாலே கன்மத்தை அடக்கி விடலாம். குமாரக் கடவுள் திருவருளால் ஆணவத்தை அடக்கி விடலாம்.

முருகப் பெருமான் விரும்பி உறையும் மூன்று பதிகளைப் பற்றி சந்தக்கடல் அருணகிரிநாதர் திருத்தணிகைத் திருப்புகழில்

**"கொந்துவார் குரவு அடியினும்**

**அடியவர் சிந்தை வாரிஜ நடுவினும்**

**நெறிபல கொண்ட வேதநன் முடியினும் மருவிய - குருநாதா"** என்று குறித்துள்ளார்.

குமாரக் கடவுள் விரும்பி உறையும் அடி, நடு, முடி மூன்றும் புண்ணியமிகு நல்ல தலங்கள்.

அடி : குரவு அடி என்பது குராவடி. அதாவது குராமரத்தின் அடி. இது திருவிடைக்கழி தலமாகும். இத்தலத்துக் குமரனை

**"மேலுலாம் தேவர் குலமுழுதாளும்**

**குமரவேள் வள்ளிதன் மாணாளன்**

**சேலுலாங்கழனித் திருவிடைக் கழியில்**

**திருக்குரா நிழற்கீழ் நின்ற**

**வேலுலாந் தடக்கை வேந்தன் என்சேந்தன்"** என்று திருவிசைப்பா போற்றுகின்றது.

நடு : முருகனடியார்களின் இதயத்தாமரையில் வீற்றிருந்து அருளும் குமரக்கடவுள் எழுந்தருள்புரியும் நடு இடம் என அமைந்த தலம் சிறுவாபுரியாகும். சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான தண் சிறுவை என்று சிறுவாபுரித் தலத்தை அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

முடி - உச்சி : முடி என்று அமைந்த தலம் திருப்போரூர். சகல வேதமுமே தொழு சமரமாபுரியாகிய திருப்போரூரை முடி எனக் கருதலாம்.

**"வெளியே ஒளியே வியனறிவே**

**வேதநாவின் முடிமணியே**

**அளியார் அமிர்தே போரூரா"** என்று சிதம்பர சுவாமிகளும் வேதத்தின் உச்சியாகப் போரூரைக் குறிக்கின்றார்.

நம்முடைய சிந்தையையே கோயிலாகக் கொண்ட குமாரக் கடவுள், தேவாசுரயுத்தம் நிகழ்த்தி ஜெயந்தி நாதராக, வெற்றி வேலராக எழுந்தருள்புரிகின்ற திருத்தலங்களுக்குச் சென்று வழிபடுவோம்; அப்பெருமான் அடி, நடு, முடியென அமைந்து அருள்பாலிக்கும் திருத்தலங்களை வழிபட்டு இம்மை மறுமை நலன்களைப் பெறுவோமாக!



1998 -ஆம் ஆண்டு கும்பாபிஷேகத் திருப்பணிகள் நடைபெறுதல்



திரு.தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர், திருமதி.சாந்தி தம்பதியர்
விமான கலசத்தில் வரகு தானியம் நிரப்பிப் பொருத்துதல் (1998)



1998-இல் நிகழ்ந்த யாக சாலை பூஜைகள்




சஷ்டி மண்டபம் - அர்ப்பணிப்பு - கல்வெட்டு (26.10.2000)



திருப்பணி மனை முகூர்த்தம்
என்னும் பூமி பூஜை



திருப்பணிகள் நடைபெறுதல்



ஸ்ரீ செல்வ முத்துக்குமாரப் பெருமான்
விமானம் பாலாலய வேள்வி




கும்பாபிஷேக யாக சாலை
பந்தக்கால் முகூர்த்தம்

# குமாரதந்திரம்

## (மந்திரோத்தார படலம்)

- திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்
உரைவிளக்கம்

முருகக் கடவுளது திருவுருவ வகை பதினாறு. அவை யாவன :

ஞானசக்திதர : ஸ்க்நதோ தேவஸேனாபதிஸ்ததா |

ஸுப்ரஹ்மண்யோ கஜாரூடச்சரகானன ஸம்பவ:|

கார்த்திகேய : குமாரச் ச ஷண்முகஸ்தாரகாந்தக||

ஸேநாநீ ப்ரஹ்மசாஸ்தாச வல்லீகல்யாணஸுந்தர :|

பாலச்ச க்ரௌஞ்சபேத்தாச சிகிவாஹனஏவச

ஏதாநி ஸ்வாமிநாமாநி....

ஏதேஷாம் ப்ரதிரூபாணாம் த்யான பேதமதோச்யதே ||

1. சக்திதர ஸ்வாமி; 2. ஸ்கந்த ஸ்வாமி; 3. தேவசேனாபதி ஸ்வாமி; 4. ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி; 5. கஜவாஹன ஸ்வாமி; 6. சரவணபவ ஸ்வாமி; 7. கார்த்திகேய ஸ்வாமி; 8. குமார ஸ்வாமி; 9. ஷண்முக ஸ்வாமி. 10. தாரகாரி ஸ்வாமி; 11. ஸேனானி ஸ்வாமி; 12. ப்ரஹ்ம சாஸ்த்ரு ஸ்வாமி; 13. வல்லி கல்யாணசுந்தர ஸ்வாமி; 14. பால ஸ்வாமி; 15. கிரௌஞ்ச பேதந ஸ்வாமி; 16. சிகிவாஹந ஸ்வாமி.

### 1. சக்திதர ஸ்வாமி

ஏகாஸ்யம் த்விபுஜம் வாமேவஜ்ரம் தக்ஷிணே கரே |
இச்சாஞானக்ரியா சக்திரூபம் சக்திதரம் பஜே ||

ஒரு திருமுகமும், இரு திருக்கரங்களும், இடக் கரத்தில் வஜ்ரமும், வலக்கரத்தில் இச்சா ஞான கிரியா சக்தி வடிவாகிய வேலாயுதமும் ஏந்திக்கொண்டு அசுரவதம் பொருட்டு நின்ற திருவுருவம்.

### 2. ஸ்கந்த ஸ்வாமி

கல்பத்ருமம் ப்ரணமதாம் கமலாருணாபம்
ஸ்கந்தம் புஜத்வயமநாமய மேகவக்த்ரம்|
காத்யாயநீஸுதமஹம் கடிபத்த தாமகௌபீன|
தண்டதர தக்ஷிண ஹஸ்தமீடே

ஒரு திருமுகமும், இரு புயங்களும், அரையில் கோவணமுங் கொண்டு, வலக்கரத்தில் தண்டை ஊன்றி, இடக்கரத்தைத் தொடையில் வைத்துச் செம்மேனியுடன் விளங்குகின்ற திருவுருவம்.

## 3. தேவசேனாதிபதி ஸ்வாமி

நௌம்யாதித்யப்ரதீப்தம் த்விதசநயநம் ஷண்முகம் மந்தஹாஸம்
வாமாங்கே ஸுஸ்திதாயாஸ்ஸரஸீ ருஹஹத்ருதாலிங்கிதாயா: ப்ரியாயா:|
உத்துங்கோருஸ்தநாக்ரே விஹித கரதலம பீதி|
கேடாதி சூலக்ராதிந்யுத்தீப்த சக்தீஷ்வஸநகநகதா குக்குடாப்ஜேஷு ஹஸ்தம்||

சூரியப்பிரகாசமும், பன்னிரு திருக்கண்களும், ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும், புன்முறுவலும்; வலக்கரத்தில் சக்தி, வாள், அங்குசம், பாணம், தண்டு, அபயமும்; இடக்கரத்தில் வஜ்ரம், கேடகம், பாசம், சேவல், தாமரை, வரதமும் ஆகிய இவைகளைத் தாங்கி, தேவர்களையும், மூவர்களையும் தனக்குச் சேனைகளாகக் கொண்டு நின்ற திருவுருவம்.

## 4. ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி

ஸிந்தூராருண மிந்துகாந்திவதனம் கேயூரஹாரதிபிர்||
திவ்யைராபரணைர் விபூஷிததநும் ஸ்வர்காதி ஸௌக்யப்ரதம்|
அப்போஜாபயசக்தி குக்குடதரம் ரக்தாங்கராகாம்சுகம்
ஸுப்ரஹமண்யம் உபாஸ்மஹே ப்ரணமதாம் பீதிப்ரணாசோத்யதம்||
அந்யச்ச :- ஏகவக்த்ரம் த்விதோர்தண்டம் கடிபத்தாபயாந்விதம்|
தருணாருணசங்காசம் ஸுப்ரஹ்மண்யமுபாஸ்மஹே!||

சிவந்த நிறமும் சந்திரகாந்திப் பிரகாசமும், ஆர கேயூரம் முதலிய சிறந்த அணிகலங்களும், ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் அபய வரதமும், வேலும் சேவற்கொடியுந் தாங்குதலுங் கொண்டு மிகவும் வரதராய் விளங்குகின்ற திருவுருவம்.

## 5. கஜவாஹன ஸ்வாமி

ஏகாநநம் த்விநயனம் வரகுக்குடௌச
வாமத்வயே நிசிதசக்த்யபயத்வயஞ்ச |
பிப்ராணமீச்வரசுதம் தபநாயுதாபம்
நித்யம் நமாமி கஜவாகநமிஷ்டஸித்யை||

ஒரு திருமுகமும், இரு திருக்கண்களும், நான்கு திருக்கரங்களும் வலக்கரங்களில் வேலும் அபயமும், இடக்கரத்தில் சேவற்கொடியும் வரதமுங் கொண்டு வேண்டியவற்றையெல்லாம் வழங்குவதாய் யானை வாகனராய் நின்ற திருவுருவம்.

## 6. சரவணபவ ஸ்வாமி

சக்திம் கண்டாம் த்வஜஸரஸிஜே குக்குடம் பாசதண்டௌ
டங்கம் பாணம் வரதமபயம் கார்முகஞ் சோத்வஹந்தம்|
பீதம் சௌம்யம் த்விதசநயனம் தேவசங்கை ருபாஸ்யம்
ஸத்பி : பூஜ்யம் சரவணபவம் ஷண்முகம் பாவயாமி||

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு, தேவகணங்களால் உபாசனை செய்யப்பட்டு நல்லவர்களால் பூசிக்கப்பட்டு, வலக்கரங்களில் சக்தி, மணி, வாள், தாமரை, சேவல், அபயமும்; இடக்கரங்களில், பாசம், தண்டம், டங்கம், பாணம், வில், வரதமும் இவைகளை ஏந்தி நின்ற திருவுருவம்.

## 7. கார்த்திகேய ஸ்வாமி

**வரதகுலிசகேடம் வாமஹஸ்தத்ரயேச**
**தததமபயசக்திம் கட்கமந்யத்ரயேச|**
**தருணரவிஸமாபம் ஸாதுபி; பூஜ்யமானம்**
**கமலவதநஷட்கம் கார்த்திகேயம் நமாமி||**

ஆறு திருமுகங்களும், ஆறு திருக்கரங்களும், செம்மையன பாலசூரியப் பிரகாசமும், வலக்கரங்களில் சக்தி, வாள், அபயமும்; இடக்கரங்களில் குலிசம், கேடகம், வரதமும் தாங்கி சாதுக்கள் வழிபட விளங்குகின்ற திருவுருவம்.

## 8. குமார ஸ்வாமி

**ஸவ்யத்வயே நிசிதசக்த்யஸிமா தநாநம்**
**வாமத்வயேபிமத குக்குடகே டகம்ததாநம்|**
**வல்லீபதிம் விபுதலோசன பூர்ணசந்த்ரம்**
**கல்யாணதாந நிரதம் கலயே குமாரம்||**

ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், வலக்கரங்களில் சக்தி, வாள், இடக்கரங்களில் கொடி, கேடகம் உடையவராய் விளங்குகின்ற திருவுருவம்.

## 9. ஷண்முக ஸ்வாமி

**ஸிந்தூரகாந்திம் சரவிபிநபவம் ஸ்ரீமயூராதிரூடம்**
**ஷட்வக்த்ரம் தேவசைந்யம் மதுரிபுதந யாவல்லபம் த்வாதசாக்ஷம்|**
**சக்திம்பாணம் க்ருபாணம் த்வஜமபிச கதாஞ்சாபயம் ஸவ்யஹஸ்தே**
**சாபம் வஜ்ரம் ஸரோஜம் கடகமபி பரம் சூலமந்யைர் ததாநம்||**

சிந்தூர காந்தி நிறமும், மயில் வாகனமும், ஆறு திருமுகங்களும், வள்ளி சமேதமும், பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களுங்கொண்டு, வலக்கரங்களில் சக்தி, பாணம், வாள், கொடி, தண்டு, அபயமும்; இடக்கரங்களில் வில், வஜ்ரம், தாமரை, கேடகம், சூலம், வரதமும் இவைகளைத் தாங்கி அருள் வடிவாய் நின்ற திருவுருவம்.

## 10. தாரகாரி ஸ்வாமி

வரதமங்குசத்வஜேச கடகௌ சாபவஜ்ரமபயபாசசக்ர
கட்கமுஸலசக்திமந்வஹம்|
த்வித சபாணிபிர்ததாநமருணகோடி ஸந்நிபம்
பஜத தாரகாரிமத்ர பவவிநாசகாரணம்||

பன்னிரு திருக்கரங்களிலும் இடத்தில் முறையே வரதம், அங்குசம், சேவற்கொடி, கேடகம், வில், வஜ்ரம்; வலத்தில் அபயம், பாசம், சக்கரம், கடகம், உலக்கை சக்தி இவைகளைத் தாங்கி தாரகனை வதைத்த திருவுருவம்.

## 11. ஸேநாநீ ஸ்வாமி

அபயமஸிரதாங்கஞ்சாங்குசம் சக்திசூலம்
வரதகுலிசபாசம் பத்மதண்டகதாஞ்ச |
தததமுபய கரத்வாதசாயாமஹஸ்தைர்
த்விதச கமலநேத்ரம் தேவஸேநாந்யமீடே||

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும், வலத்தில் அபயம், வாள், சக்கரம், அங்குசம், சக்தி, சூலம்; இடத்தில் வரதம், குலிசம், பாசம், தாமரை, தண்டம், கதை இவைகளை ஏந்திய வடிவங்கொண்டு தேவர்களைச் சைந்யமாகக் கொண்டு பன்னிரு செந்தாமரைக் கண்களுடன் நின்ற திருவுருவம்.

## 12. பிரம்மசாஸ்த்ரு ஸ்வாமி

வாமேகரேச யுகளே வரகுண்டிகேச
ஸவ்யேஸூத்ர மபயம் தததம் விசாகம்|
வல்யாயுதம் வநஜலோசநமேகவக்த்ரம்
வந்தாமஹே வநஜ ஸம்பவசாஸிதாரம்||

செந்தாமரைக் கண்கள் கொண்ட ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும் வலக்கரங்களில் அபயமும் உருத்திராக்க மாலையும்; இடக்கரங்களில் வரதமும் குண்டிகையும் உடையவராய் நான்முகக் கடவுளுக்கு உபதேசித்த திருவுருவம்.

## 13. வல்லீ கல்யணசுந்தர ஸ்வாமி

ஹஸ்தத்வந்த்வேக்ஷமாலாமப யமபித்ருதம் குண்டிகாம் ச்ரோணிபந்தம்
ஸவ்யே வாமே நிஷண்ணச் ருவத்ருத விதிநா
ஹரியமாநேந புக்தம்|
ஸர்வாலங்கார யுக்தம் ஜலகலசத்ருதா விஷ்ணுநா சாருணாபம்
வல்லீகல்யாணமூர்த்திம் ஸகல ஹரிரகணை: ஸ்தூயமானம் ப்ரபத்யே||

உருத்திராக்க மாலையும், குண்டிகையும், வரதாபயமும் உடைய திருக்கரங்களுடன், வள்ளியம்மையாருடன், திருமால் நீர்க் கலசத்து தாரை வார்க்க ஓமம் செய்யப்பட்டவராய் எல்லா அமரர்களும் சேவிக்க விளங்குந் திருவுருவம்.

## 14. பால ஸ்வாமி

**பத்மஸவ்ய கடிஸம்யுத வாமம் பத்மகாந்திநிபமேகமுகஞ்ச|**
**பாலவ்ருத்தி கரமீச்வரஸூநும் பாலமுந்நதபுஜம் ப்ரணதோஸ்மி||**
**அந்யச்ச – ஏகவக்த்ரம் த்விநயநம் பத்மத்வயகரத்வயம்|**
**விப்ரப்ரியகரம் வந்தே பாலரூபம் ரவிப்ரபம்||**

குழந்தை உருவாய் மேல் தூக்கிய இரு கரங்களும், அக்கரங்களில் தாமரை மலர் இரண்டு கொண்டு அம்மையப்பருக்கு இடையில் அமர்ந்திருக்கும் திருவுருவம்.

## 15. கிரௌஞ்சபேதன ஸ்வாமி

**அபயசிதக்ருபாணௌ சக்திபாணௌச ஸவ்யே**
**வரதகுலிசசாபம் கேடகஞ்சாந்யஹஸ்தே|**
**தததமமரசேனாநாயகம் சாஷ்டபாஹும்**
**கமலவதநஷட்கம் க்ரௌசஞ்சபேத்தாரமீடே||**

ஆறு திருமுகங்களும், எட்டுத் திருக்கரங்களும் அபயம், கிருபாணம், வேல், அம்பு, வரதம், குலிசம், வில், கேடகம் என்ற ஆயுதங்களை முறையே வலமும் இடமுங்கொண்டு தேவசேனைகள் சூழ கிரௌஞ்சத்தைப் பிளந்த திருவுருவம்.

## 16. சிகிவாஹன ஸ்வாமி

**வித்ருமப்ரபமேகமுகம் விபும் வஜ்ரசக்திவரதாபயபாணிம்|**
**தேவலோகரிபுக்நமவிக்நதம் நௌமி ருத்ரபவம் சிகிவாஹம்||**

பவள நிறமும், ஒரு திருமுகமும், நான்கு திருத்தோள்களும், வஜ்ரம், வேல், வரதம், அபயம் இவைகளுடனும், மயில் வாகனத்தில் ஊர்ந்த வண்ணமாய் அமரர்களுடைய இடரை நீக்கிய திருவுருவம்.

நன்றி! திருப்புகழ் விரிவுரை

**– திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்**
குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

திருச்சிற்றம்பலம்

# கலைக்கோயில்

சிவநெறிச்சுடர்.

தி. பொன்னம்பலம் M.A., MPhil., M.Ed.

திருக்கோயில்கள் சமயநிலையங்களாக மட்டும் திகழ்கின்றன என்று எண்ணுதல் கூடாது. அவை கலைகளை வளர்க்கும் கலை நிலையங்களாகவும் திகழ்கின்றன. சிதம்பரம் திருக்கோயில் பரதக்கலை, சிற்பக்கலை, இசைக்கலை, ஓவியக்கலை, கட்டடக்கலை எனப் பல கலைகளையும் வளர்த்த கலை நிலையமாகப் பொலியக் காணலாம்.

## பரதமும், சிற்பமும் :

அழகுக் கலைகளுள் - நுட்பக் கலைகளுள் சிற்பக்கலை நிலைக்கலையாகும். பரதக்கலை சலனக் கலையாகும்.

நிலைக்கலையாகிய சிற்பக்கலையையும், சலனக் கலையாகிய நாட்டியக் கலையையும் ஒருங்கிணைத்து பரதக்கலையின் பெருமைகளை விளக்கும் நடன இயக்கங்களை அழகிய சிற்பங்களில் கலைஞர்கள் அமைத்துள்ள திறத்தைச் சிதம்பரம் கோயிலில் காணலாம். இதனை மாணிக்கவாசகர் "**சிற்பந்திகழ்தரு திண்மதில் தில்லைச்சிற்றம்பலம்**" என்று திருச்சிற்றம்பலக் கோவையாரில் குறித்துள்ளார்.

இத்திருக்கோயிலில் நோக்கும் இடமெல்லாம் நடன சிற்பங்கள், சிற்பக்கலை வளர்ச்சியின் உச்சநிலையைப் பறைசாற்றி வருகின்றன.

தேர்வடிவில் அமைந்த நிருத்தசபை சிவகாமிஅம்மன் கோயில் திருச்சுற்றில் அமைந்துள்ள பரதம் ஆடுகின்ற நிலையிலுள்ள நூற்றுக்கணக்கான மகளிர் தம் புடைப்புச் சிற்பங்கள், ஆயிரங்கால் மண்டபத்தின் அடிப்பகுதியில் காணப்படும் நடனச் சிற்பங்கள். இவற்றைக் கண்டு அதன் அதிஅற்புத நேர்த்தியில் மயங்கி நாமும் சிலையாகி விடுகின்றோம். இவை பரதமுனிவரின் நாட்டிய சாஸ்திரத்தைப் பின்பற்றும் "**மார்கி**" என்னும் சாஸ்திரிய நாட்டிய உத்திகளையும். பிற்காலத்தில் பரவலாக ஆடப்பட்டு வந்த ப்ரேங்கணி, பேரணி, திருவாலத்தி, திருச்சூலம் போன்ற தேசி எனப்பெறும் நடன உத்திகளையும் பிரதிபலிக்கின்றன.

கோபுர வாயில்களில் பரதமுனிவர் கூறியுள்ள 108 கரணங்களும் அற்புதமாகச் செதுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கோபுர வாயிலிலும் இரண்டு பக்கச் சுவர்களிலும் ஏழுதூண்களில் புடைப்புச் சிற்பங்களாக இவை காணப்படுகின்றன. இவற்றை உமையம்மையின் நடனத்திருக்கோலங்கள் என்று தலை சிறந்த நாட்டிய மாதரசிகள் தம் ஆய்வில் கண்டறிந்து கூறியுள்ளனர். ஆண்டுதோறும் மகாசிவராத்திரி தொடங்கி ஐந்து நாள்கள் நாட்டியாஞ்சலி விழா தில்லையில் நிகழ்வது குறிப்பிடத்தக்க சிறப்பாகும்.

சாத்திர அடிப்படையிலமைந்த நாட்டிய செய்முறைகளுக்கு சிற்பங்களாக விளங்கி பண்டைய நடன முத்திரைகளின் காட்சி உரையாக இருப்பது சிதம்பரம் நடராசர் ஆலயம் என்றால் அஃது மிகையன்று. ஊனக்கண்களுக்கு அப்பால் உள்ள கலைக்கண் கொண்டு இறை நம்பிக்கை என்னும் ஒளியின் துணையோடு பார்த்தால்தான் இந்தப் பரத சிற்பங்களின் மாட்சிமை விளங்கும்.

**இசைக்கலை :**

ச.ரி.க.ம.ப.த.நி என்னும் ஏழுசுரங்களிலிருந்துதான் ஏழுவகை நடனங்கள் தோன்றின என்கிறது திருப்புத்தூர்ப் புராணம். நடனக்கலை நாயகனாகிய நடராசப் பெருமானின கோயிலில் இந்த இசைக்கலை போற்றி வளர்க்கப்பட்டு, இன்றளவும் பாதுகாக்கப் பெற்று வருகிறது. பண்சுமந்த பாடல்களாகிய சைவத்திருமுறைகள் தில்லைக் கோயிலில் தான் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன என்பது வரலாறு. எனவே சிதம்பரத்தை செந்தமிழ் இசை வளர்த்த தெய்வநகரம் என்று இயம்பலாம்.

இசைக்கலை வழக்கில் பண்முறைப் பாடல்களுக்குப் பின்னர் பல்லவி, அனுபல்லவி, சரணம் என்றும் முப்பிரிவுகளின் சிறப்புப் பொருந்திய கீர்த்தனைப்பாக்கள் தோன்றின. தில்லையம்பலவாணர்மீது கீர்த்தனைகளைப் பாடி செந்தமிழ் இசைக்கு அணி சேர்த்தவர்களில் சீர்காழி முத்துத்தாண்டவர், நரிமணம் கோபாலகிருஷ்ண பாரதியார், தில்லைவிடங்கன் மாரிமுத்தாப்பிள்ளை ஆகியோர் சிறப்பாகக் குறிக்கத்தக்கவர்கள் ஆவர். இவர்களைச் சங்கீத ஆதிமும்மூர்த்திகள் என்று இசையுலகம் புகழ்கின்றது. சிதம்பரம் கோயிலில் தேவாரப் பதிகங்களைப் பண்ணோடு பாடுவோர்க்கும், முரசு முழக்குவோர்க்கும் நிவந்தங்கள் விடப்பட்ட செய்திகளைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

கி.பி.13-ஆம் நூற்றாண்டில் சங்கீதரத்னாகரம் என்னும் வடமொழி இசைநூலை இயற்றிய சாரங்கதேவர், பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளில் வழங்கும் இசைகளுக்கெல்லாம் மூலக்கூறாக விளங்கும் பண்கள் சிதம்பரத்தில் கண்டெடுக்கப்பட்ட தேவாரப் பண்களே என்று கூறுவதிலிருந்து இசைக்கலைக்குச் சிதம்பரம் தந்துள்ள பெருங்கொடையின் சிறப்பை இனிதுணரலாம்.

குழலின் ஓசை வீணை மொந்தை கொட்ட, முழவு அதிரக் கழலின் ஓசை ஆர்க்க ஆடும் கடவுளாகிய நடராஜர் கோயிலில் சுத்தமத்தளம் என்ற இசைக்கருவி பூசா காலங்களில் ஒலிக்கப் பெறுகிறது. துவஜாரோகணம் என்னும் கொடியேற்ற நாளில் உற்சவ ஆசாரியரே சுத்தமத்தளத்தை தட்டி ஒலித்து இசைக்கருவிகட்குப் பூசை செய்வார். இதனைப் **"பேரீதாடனம்"** என்பர். பிரமதாளம் பூசா காலங்களில் ஒலிப்பது செவிக்கு இனிமை தரும்.

நாதஸ்வரம் மற்றும் தவில் வாத்தியங்கள் சிதம்பரம் கோயிலில் பண்டைய மரபு மாறாமல் இன்றும் இசைக்கப்படுகின்றன. ரிக் வேதத்தில் உத்தால வேணு என்றும் சங்க இலக்கியத்தில் பெருவங்கியம் என்றும், நாதஸ்வர இசைக்கருவி குறிக்கப் பெற்றுள்ளது.

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் சுவாமி புறப்பாட்டுக்கு மல்லாரி என்னும் இசையை நாதஸ்வரக் கலைஞர்கள் வாசிப்பது வழக்கம். மல்லாரி என்பது சாகித்யம் இல்லாத ஒரு இசை வகை. நாதஸ்வரத்திற்கென்றே இது பிரத்யேகமாக அமையப் பெற்றது. கம்பீரநாட்டை என்ற இராகத்தில் மல்லாரி இசைக்கப்படும்.

சிதம்பரம் ஆலய திருவிழாக்களில் சுவாமி திருவீதியுலாவிற்கு மல்லாரி இசையை ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட முறைப்படியே இசைக்க வேண்டும் என்பது மரபாகப் பின்பற்றப் பெறுகிறது.

ஐந்தாம் திருநாளன்று பஞ்சரத்ன மல்லாரி வாசிக்கப்படும். எட்டாம் திருநாளன்று ஒடக்கூறு என்னும் இசையை நாதநாமக்கிரியா இராகத்தில் வாசிப்பர். நடராஜர் தேருக்கு எழுந்தருளும் போது தேர்மல்லாரி இசைக்கப்படும். இது ஐந்து அட்சரங்களைக் கொண்டதாகிய **"பஞ்சாட்சரம்"** ஆகும். இது கண்ட நடையில் வாசிக்கப்படும்.

இவ்வாறு இசைமரபுகளைப் பாதுகாத்து இன்றளவும் பின்பற்றி வருகின்ற சிதம்பரம் நடராஜர் கோயிலை இசைக்கோயில் என்று சொன்னால் அது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை. ஆண்டுதோறும் மகா சிவராத்திரியையொட்டி இசைவிழா சிதம்பரத்தில் சிறப்புற நிகழ்ந்து வருகின்றது.

**ஓவியக்கலை :**

அழகுக் கலைகளுள் ஓவியக்கலை தொன்மையானது. ஏனைய பிற கலைகளுக்கு தாயாம் தன்மையுடையது. சிதம்பரம் கோயிலில் ஓவியக் கலைக்கென சிறப்பிடம் இருந்து வருகின்றது. அந்நியர் படையெடுப்பால் கோயில் பலமுறை சிதைக்கப்பட்ட போது அங்கிருந்த பழங்கால ஓவியங்கள் சிதைந்துவிட்ட நிலையில் இன்று நாயக்கர் கால ஓவியங்களே காணக் கிடைக்கின்றன.

சிவகாமி அம்மன் கோயிலின் முன் மண்டப விதானத்தில் கி.பி.17-ஆம் நூற்றாண்டில் தஞ்சையிலிருந்து ஆண்ட அச்சுதப்ப நாயக்கர் காலச் சித்திரங்களைக் கண்டு களிக்கலாம். வடபாலுள்ள அங்கணங்களில் சிவனது பிட்சாடனத் திருக்கோலமும், திருமாலின் மோகினி அவதாரமும் பல்வேறு காட்சிகளாக அமைந்துள்ளன. தில்லைத் தலபுராணக் காட்சிகளும் சித்திரங்களாகக் காட்சியளிக்கின்றன.

பெரிய புராண இலக்கியக் காட்சிகளும் பக்திரசம் ததும்ப ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. முன் மண்டப விதானத்தின் நடுப்பகுதி இக்காலத்து ஓவியங்களாக வண்ணமயமாய்க் காட்சியளிக்கின்றது. இதில் தேவி மகாமித்தியம், லலிதா சகஸ்ரநாமம் ஆகியவற்றின் தொடர்புள்ள பல காட்சிகள் வரையப் பெற்றுள்ளன.

பாண்டிய நாயகர் கோயில் திருவோலக்க மண்டப விதானத்ததால் மட்டுமல்லாமல் கோயில் விதானம் முழுவதிலும் சித்திரக்கலையின் எழிற்கோலக் காட்சியினைக் கண்டு களிக்கலாம்.

ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகிய திருப்பரங்குன்றத்தில் சங்க காலத்திலேயே புராண ஓவியங்கள் எழுதப் பெற்ற எழுதெழிலம்பலம் இருந்ததென்பது பரிபாடலால் தெரிய வருகின்றது. சிதம்பரத்தில் அருணகிரி நாதரின் திருப்புகழ் பாடல் பெற்ற பாண்டிய நாயகம் முருகன் கோயிலிலும் எழுதெழில் அம்பலம் அல்லது எழுத்துநிலை மண்டபம் அமைந்துள்ளமை போற்றத்தக்கது. கந்தபுராணக் காட்சிகள், அறுபடை வீடுகள், முருகன் திருவண்ணாமலையில் அருணகிரி நாதருக்கு அருள்புரியும் காட்சி, கற்கிமுகி எனும் பூதத்தால் சிறைப்பட்ட நக்கீரர் ஞானவேலால் மீண்டு திருவருள் பெறும் காட்சி முதலியன இனிது சித்திரமாகத் தீட்டப்பட்டுள்ளன.

நவநாரிக்குஞ்சரம் என்பது பெண்கள் ஒன்பதின்மரைப் பல்வேறு அமைப்புக்களில் பொருத்தி யானை உருவம் உண்டாகுமாறு கலை வண்ணத்தில் உருவாக்குவதாகும். பாண்டிய நாயகர் கோயிலில் ஓவியரின் கற்பனை நலம் நிறைந்த நவநாரிக்குஞ்சர சித்திரம் அமைந்துள்ளது.

திருமூலட்டான ஈசுவரர் கோயிலில் காணலாகும் இருபத்து நான்கு சிவமூர்த்தி சித்திரங்கள், ஆயிரங்கால் மண்டப விதானத்தில் காணப்பெறும் நவதாண்டவச் சித்திரங்கள் மகிழ்ந்து காணத்தக்கவை. கனகசபையின் சுற்று அங்கணங்களில் காணப்படும் சித்திரங்கள் தொன்மையானவை.

திருமூலநாதர் கோயில் திருச்சுற்றின் மேல்விதானத்தில் அட்டநாக பந்தப்பாடல் ஒன்று சித்திர கவியாக அமைந்துள்ளது.

**தில்லைத் திருமூலத் தேவர் அணியரவே**

**கல்வளைத்தே நீறுபடக் காத்தனையால் - செல்வர்பணி**

**பூண்டு புகழ் கொண்டீர் பூளைப் பரனேனை**

**தீண்டு விடமேறா திரு.**

என்பது அப்பாடலாகும்.

**<u>காவியக்கலை</u> :**

தமிழ் இலக்கிய வரலாற்றில் சிதம்பரத்துக்கு ஒரு முக்கிய இடம் உண்டு. இடைக்கால இலக்கியங்களாகிய பெரிய புராணம், கம்பராமாயணம் என்ற இரண்டும் சிதம்பரத்தில் ஆயிரங்கால் மண்டபத்தில் தான் அரங்கேற்றம் செய்யப் பெற்றன. மணிவாசகர் சொல்லச் சொல்ல நடராஜப் பெருமானே தம் கைப்பட திருவாசகத்தினை எழுதிக் கொண்டார் என்பது திருவாசகத்துக்கு மட்டுமன்றி தமிழ் மக்களுக்கே பெருமை தரும் செய்தியாகும். கடவுள் மனிதனுக்குச் சொன்னது கீதை. மனிதன் மனிதனுக்குச் சொன்னது திருக்குறள். மனிதன் கடவுளுக்குச் சொன்னது திருவாசகம் என்று இதன் மேன்மையைச் சான்றோர் புகழ்வர். தில்லைபாதிதிருவாசகத்தில் என்ற வாசகம் சிதம்பரத்தின் பெருமையை இனிது விளக்கும் திருவாசகத்தினை எழுதிக் கொண்ட அம்பலக்கூத்தர் "**பாவை பாடிய வாயால் ஒரு கோவைபாடுக**" என விரும்பிக் கேட்டுப் பெற்ற சிறப்பு திருச்சிற்றம்பலக் கோவையாருக்கு உண்டு. பெரிய புராணத்திற்கு உலகெலாம் என்று பொன்னம்பலவாணரே அடியெடுத்துக் கொடுத்தார் என்பதும் நெஞ்சில் இனிக்கும் செய்தியாகும்.

தமிழகத் திருக்கோயில்களிலேயே மிக மிக அதிகமான நூல்களாலும், பாடல்களாலும் போற்றப் பெற்ற சிவத்தலம் சிதம்பரமே. இத்தலத்தைப் போற்றி எழுந்த வடமொழி நூல்களும், தென்மொழி நூல்களும் மிகப்பல.

மூவர் தேவாரம் - 11 பதிகங்கள்
திருவாசகம் - 25 பதிகங்கள்
திருக்கோவையார்

திருமுறைகண்ட புராணம்

திருவிசைப்பா திருப்பல்லாண்டு

திருமந்திரத்தில் பல மந்திரங்கள்

பெரிய புராணம்

கோயிற் புராணம்

சிதம்பர சபாநாத புராணம்

சிதம்பர புராணம்

புலியூர்ப் புராணம், சேக்கிழார் புராணம்

திருவருட்பா

சிதம்பரத்தலத்துக்குரிய திருப்புகழ் பாக்கள் - 67

கோயில் நான்மணி மலை, சிதம்பர மும்மணிக் கோவை, தில்லைக் கலம்பகம், சிதம்பரச் செய்யுட்கோவை, தில்லையுலா, மூவருலா, புலியூர் வெண்பா, சிவகாமியம்மை அந்தாதி, சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், பாண்டியநாயகர் பிள்ளைத்தமிழ், நடராச சதகம், தில்லையமக அந்தாதி, சிதம்பர வெண்பா, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், சிவகாமியம்மை பதிகம், தில்லை நவமணி மாலை, பரமரகசிய மாலை, தில்லைத் திருவாயிரம், நடராஜப்பத்து, சிதம்பரக்கும்மி, நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, முத்துத்தாண்டவர் கீர்த்தனைகள், தில்லைபாதி நெல்லைபாதி, சிவகாமியம்மை பஞ்சரத்தினம், சிதம்பரம் பாட்டியல், தகராலய ரகசியம் என்று இன்னும் அடுக்கிக் கொண்டே போகலாம். காப்பியங்கள் சிற்றிலக்கியங்கள், இலக்கண நூல்கள் என்று சிதம்பரத்திற்குரிய நூல்கள் பல்கிப் பெருகி நிற்பதைப் பார்த்தால் மூக்கின் மேல் விரல் வைக்கத் தோன்றும்.

கைவல்ய உபநிஷத்து, சாந்தோக்கிய உபநிஷத்து, தைத்தரீய உபநிஷத்து, சுவேதா சுவதரோப நிஷத்து போன்ற உபநிடதங்கள்.

தில்லைவன மான்மியம், சிதம்பர மான்மியம், ஹேம சபாநாத மான்மியம், புண்டரீகபுர மான்மியம், வியாக்கிர புர மான்மியம், சித்சபாபிரதிஷ்டா மான்மியம் முதலிய மான்மியங்கள்.

சிதம்பர ரகஸ்யம், ரகசியப் பிரணவப்ரகார லட்சணம், மகாரகஸ்ய ஸ்தான லட்சணம் சிதம்பர ரகஸ்ய மந்திர உபாசனா கற்பம், சம்மேளனப் பிரஸ்தாரம் முதலிய இரகஸ்யம் குறித்த நூல்கள்.

சித்சபாசம்புரோட்சண கற்பம், சிற்சபா சம்புரோசண சூத்திரம், சித்சபா சம்புரோட்சணபாஷ்யம், ஆகாஸ பைரவ கற்பம், சிதம்பர பஞ்சாட்சர கற்பம், சிதம்பர கற்பம், சிதம்பர கவசம், சிதம்பர தீட்சித ஸ்தோத்திரம், நடராஜ சகஸ்ரநாம தோத்திரம், சிதம்பராஷ்டகம், நடேசாஷ்டகம், நடேசதோத்திரம், நடராஜதிக்பந்தனம், சிதானந்தாஷ்டக தோத்திரம், சிதம்பரேஸ்வர புஜாங்காஷ்டகம், நடேசவிஜயம், பதஞ்சலி சரித்திரம் என்று பல பலவாய் பல்கிக் கிடக்கும் வடமொழி நூல்கள். இவையனைத்தும் பாரத நாட்டின் காவிய வளத்துக்குச் சிதம்பரம் தந்த கொடைகள் அல்லவா!

இவையேயன்றிச் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பதினான்கில் எட்டு நூல்கள் சந்தான குரவராகிய உமாபதி சிவாசாரியார் சிதம்பரத்திலிருந்து அருளியவை. இந்நூல்கள் சித்தாந்த அஷ்டகம் என்று அழைக்கப் பெறுகின்றன.

**கட்டடக்கலை :**

**காட்சிக்கலை** (Visual Art) ஆகிய கட்டடக்கலை ஏனைய பிற கவின் கலைகளைத் தன்னுள் இணைத்துக் கொண்டே வளர்ச்சி பெற்றிருக்கின்றது. வளமனைகளாகிய மாளிகைகளிலும், திருக்கோயில்களிலும், திருமடங்களிலும், சித்திரத்துக்கும் சிற்பத்துக்கும் போதிய இடந்தருகின்ற காரணத்தால் கட்டடக்கலை "**கட்டடச்சிற்பம்**" என்று சொல்லத்தக்கவாறு கவின் கலைகளின் பிணைப்பாக இருக்கின்றது. சிதம்பரத் தலத்தைப் பொறுத்தவரை இக்கோயில் கட்டடக்கலை கலைகளோடு மட்டுமன்றி தத்துவார்த்த அமைப்புக்கும் இடந்தருகின்ற வகையில் அமைந்துள்ளது எனலாம்.

சிதம்பரம் பஞ்ச பூதத்தலங்களுள் ஆகாயத்தலம், சித்-ஞானம், அம்பரம் - ஆகாயம், ஞான ஆகாயம் என்பது பொருள். இத்தலம் அளவில்லாத பெருமைகளையுடையது.

**சிதம்பரத்தைப் பற்றி சுவேதாசுவதர உபநிடதம்**

**ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட**

என்று விதந்து ஓதுகின்றது.

ஆன்மாவினுடைய உள்ளமென்னும் இதயம் செந்தாரை முகுளம் போன்றது. அதோமுக வடிவானது, ஐந்து துளைகளையுடையது, உடலின் மத்தியத்துக்குச் சிறிது இடப்புறத்தில் நிலை பெற்றுள்ளது, 26 துறட்டெலும்புக்குள் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது, சிவந்த நிறமுடையது. இந்த இதயத்தில் உட்புறமுள்ள ஆகாயம் சித்சக்தி வடிவாகிய சிதம்பரம். இது பூத ஆகாயம் போன்று ஜடமாகாது. இது தகராகாசம் இதில் மின்னல் கொடியைப் போன்று சிவம் அசைந்து கொண்டிருக்கின்றது. இந்தச் சிதம்பர இரகசியத்தை ஞானிகள் நன்குணர்வர். இங்கே இறைவன் ஆதியும் முடிவும் இல்லாத அற்புதத் தனிக்கூத்து ஆடுகின்றான். இதனை தில்லை மூதூர் ஆடிய திருவடி பல்லுயிரெல்லாம் பயின்றனன் ஆகி என்பார் மாணிக்கவாசகர்.

பொதுவாகக் கோயில்கள் கிழக்கு மேற்கில் நீளமாக அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் சிதம்பரம் நடராசர் கோயிலோ தெற்கு வடக்கில் நீளமாக அமைந்திருக்கும். இது கட்டடக் கலையில் அமைந்திருக்கும் தனிச்சிறப்பு. கோயில் வளாகம் 51 ஏக்கர் பரப்பளவினது என்பர். கோயில் வளாகத்தில் சிவகங்கைக் குளத்துக்குத் தென்புறம் நடராசர் சபையும், திருமூலட்டானர் சன்னதியும் அமைந்துள்ளன. மேற்கே சிவகாமியம்மன் கோயிலும், வடமேற்கில் பாண்டிய நாயகர் சன்னதியும் அமைந்துள்ளன.

சிதம்பரம் கோயிலில் சிற்சபை, கனகசபை, ராஜசபை, நிருத்த சபை, தேவ சபை ஆகியன மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. இந்த ஐந்து சபைகளும் அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்று தத்துவ நோக்கில் சொல்லப் பெறுகின்றன.

சிதம்பரத்திலுள்ள தில்லைக் கோவிந்தராசர் கோயில் **"திருச்சித்ர கூடம்"** என்றழைக்கப் பெறுகின்றது.

நான்கு திசைகளிலும் நான்கு கோபுரங்கள் உள்ளன. இவை ஏழுநிலைக் கோபுரங்களாகும். கோபுர உச்சியில் பதின்மூன்று கலசங்கள் அணி செய்கின்றன. இந்த நான்கு கோபுரங்களின் வழியாக சமயகுரவர் நால்வரும் வந்து வழிபட்டனர் என்பர் சேக்கிழார் பெருமான்.

விக்கிரமசோழன் கட்டிய நூற்றுக்கால் மண்டபம் சிவகங்கைக் குளத்தின் தென்மேற்கு திசையில் உள்ளது. விராட்டிபுருடனாகிய மனிதன் வடக்கே தலை வைத்துத் தெற்கே கால்நீட்டிப் படுத்திருப்பது போன்ற அமைப்புடன் இக்கோயில் விளங்குகிறது.

**<u>கட்டிடத்தில் தத்துவம்</u> :**

உருவக அமைப்பில் சிதம்பரத்தை ஆராய்ந்து உணர்ந்தவர்கள் தரும் தத்துவ விளக்கம் வியக்க வைக்கிறது.

நான்கு வேதங்கள், நான்கு கோபுரங்கள், ஆயிரங்கால் மண்டபம், சகஸ்ரநாமம் என்னும் ஆயிரம் இதழ்த் தாமரை, சிவகங்கைத் தீர்த்தம், சகஸ்ரநாமத்தை அடுத்துள்ள அமிழ்தப் பொய்கை, சபையிலுள்ள நான்கு தம்பங்கள், நான்மறையின் அதிதெய்வங்கள், அடுத்துள்ள 28 நெடுந்தூண்கள், ஆகமங்கள். 96 பலகணிகள், 96 தத்துவங்கள், பொற்கூரையின் மேலுள்ள 9 கலசங்கள், நவசக்திகள். விமானத்தின் 64 சுழிகள், 64 கலைகள். பொன் ஓடுகளின் எண்ணிக்கை 21600. இவை ஒரு மனிதன் ஒருநாளில் விடும் சுவாசங்களின் எண்ணிக்கையைக் குறிக்கும். பொன்னோடுகளில் அடித்துள்ள ஆணிகள் 72000 நாடிகளைக் குறிக்கும்.

நிருத்த சபை சக்கரங்களுடன் கூடிய குதிரை பூட்டிய தேர் வடிவில் கட்டப்பட்டுள்ளது.

பாண்டிய நாயகர் கோயில் சக்கரங்களுடன் கூடிய யானை பூட்டிய தேர் வடிவில் அமைந்துள்ளது. திராவிடக் கட்டடக் கலைப் பாணியில் அமைந்த சிதம்பரம் கோயிலில் திராவிடக் கலாச்சாரமும், ஆரியக் கலாச்சாரமும் ஒன்றிக் காணப்படுகின்றன.



# சித்தாந்த நடனம்

முனைவர். **செ. உமா மகேஸ்வரி**
காஞ்சிபுரம்

சைவ சமயத்தின் முழுமுதற் பொருள் சிவபெருமான் ஆவான். சொருபநிலையில் அவனுக்கு உருவம், பெயர், தொழில் என்பது இல்லை. உயிர்களின் பொருட்டு தடத்தநிலையில் வருகின்றபோது அவனுக்கு பெயர், உருவம், தொழில் என்பன கூறப்படுகின்றன. மேலும் அவற்றில் உருவம் என்பது உயிர்களின் கலப்பு நிலையில் உருவம், அருவம் என்கிற திருமேனிகளை ஏற்பதாகும். இத்திருமேனிகள் எல்லாம் அவனுக்கு உபசார வடிவமாகும். இத்திருமேனிகள் மாயையின் கலப்பு இல்லாத சுத்த திருமேனிகளாகும். உயிர்கள் உருவம் மாயை கலப்பு கொண்டதாகும் என்பது சைவ சித்தாந்த அடிப்படைக் கோட்பாடாகும். இறைவன் திருமேனி திருவருளால் வருவதாகும். அதற்கு பரிணாமம், விருத்தி போன்றவற்றைக் கூறமுடியாது. உயிர்கள் உணர்த்த உணர்வன, படிமுறையில் உணர்வன, அதற்கு ஞானம் வழங்கும் பொருட்டு இறைவன் திருமேனி தாங்கி வருகின்றான். இறைவன் உயிர்களின் துன்பத்தைக் களைவதற்கும், இன்பம் கொடுப்பதன் பொருட்டும் நடனம் நிகழ்த்துகிறான்.

சிவனின் இருபத்தைந்து திருமேனிகளில் ஒன்றாக 'ஓங்கார வடிவம் கொண்ட நடராசத் திருமேனி' விளங்குகிறது. அத்திருமேனியின் நடன அசைவு உலக அசைவிற்கும், உயிர்கள் அசைவிற்கும், உடல் அசைவிற்கும் காரணமாக அமைகின்றது. இது உயிர்களின் இன்ப துன்ப மயக்கத்ததைத் தெளிவிக்க உதவுகின்ற அருள் செயலாகும். சேக்கிழார் அருளிய பெரியபுராணம் முதல் பாடலிலேயே "அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்" என்று தொடங்குகின்றார்.

## "அழகிய நடன தரிசனம்"

ஆடல், கூத்து, கூர்மை (sharpness) (101,tamil lexicon) என்கிற மூன்று வகையான பொருட்களைத் நடனம் என்கிற சொல் தருகின்றது. வெளிப்படையாக பாாக்கின்ற போது ஆடல் கூத்தாகவும், நடனமாகவும் தெரியும். சைவ சமயத்தின் அடிப்படை நூல்களான திருமுறைகள் சாத்திரங்கள் புராணங்களில் சிவநடனம் பற்றி பல்வேறு வகையான கருத்துக்கள் கூறப்படுகின்றன. தத்துவச் சிந்தனையுடன் சிவநடனம காணும் போது அதில் நுட்பமான பல தத்துவக் கருத்துக்கள் விளங்கும்.

## நடராசர் உருவம் :

'நடராசர் உருவம்' இந்திய மக்களின் பேரறிவின் பெருவிளைவாகக் கிடைத்த உருவமாகும். இதில் கலையியலும், அறிவியலும், தத்துவமும், சமயமும் ஒருங்கே கலந்த கலவையைக் காணமுடியும். தடத்த நிலையில் இறைவன் ஏற்கும் உருவங்கள்

இருபத்தைந்து உருவங்களில் ஒன்றான நடராசர் வடிவம் சிறப்புடையதாகும். இவ்வடிவம் தமிழ்நாட்டின் பெருங்கலையின் தனிச்சிறப்பாகும். இந்நடராசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் தில்லைக் கோயில் சைவர்களுக்குக் கோயில் ஆகும். பஞ்சபூத தலங்களில் ஒன்றான ஆகாயத்தலமாகும். தில்லையில் ஆடும் சிவ நடனம் "ஆனந்தக் கூத்து" எல்லையில்லாத தனிப்பெரும் கூத்தாகும். உலகம் உய்யும் பொருட்டு மாறிலா மகிழ்ச்சியிலும் ஆனந்த களிப்பிலும் இறைவன் நடம் செய்வதாகச் சேக்கிழார் பெரிய புராணத்தில் குறிப்பிடுகின்றார். நடராசர் நடனத்திருமேனி உருவம், அருவம் என்கிற இரு நிலைகளின் கலப்புடையதாகும்.

- உருவம் - பரந்த திருமுகமும், பனித்தசடையும், தரித்த கங்கையும், பிறையும், குனித்த புருவமும், ஒரு கையில் உடுக்கையும் ஒரு கையில் நெருப்பும்அபயகரமும் மற்றொன்று வீசிய கரம், புலித்தோல் ஆடை, பாம்பு அணிந்தும் எடுத்த திருவடியும் ஊன்றிய திருவடியாக உருவக் காட்சி அமைகின்றது.
- அருவத்திருமேனி : மந்திரங்களால் ஆனது
- தூலதேகம் சூக்குமதேகம் என இரு வகையாகும்.
- திருவடி-ந, வயிறு-ம, தோளில்-சி, முகம் - வ, திருமுடி-ய என்பது தூல உருவம்
- துடியில்-சி, வீசுகரம்-வ, அபயகரம்-ய, ஏந்தியகைந, ஊன்றியதிருவடி- ம, சூக்கும வடிவம்.
- நடராசர் வடிவத்தில் பிரிவற இணைந்துள்ள திருவாசியானது பிரணவம். ஓங்கார வடிவம் 51 எழுத்துக்களால் ஆனது.

இறைவன் அண்டத்தில் ஆடும் ஆடல் தூலம், பிண்டத்தில் ஆடுவது சூக்குமமாகும். இவ்வாடல் காண்பதற்கு ஒரு இயக்கமாகத்தான் தெரியும், ஆனால் அதன் விளைவாகிய பயன் அறிவென்றும், இச்சையென்றும், செயல் என்றும் மூன்றாக வெளிப்படும்.

ஞாயிறு ஒன்றாகத் தோன்றினாலும் அதன் இருப்பை வெளிப்படுத்தும் ஒளி கதிர் என்கிற வெப்பம் பலவாகத் தெரிவதைப் போன்று "சிவ நடனம்" என்கிற ஒலி நிலையான பொருளிற்கும் நிலையற்ற பொருளின் இயக்கத்திற்கும் காரணமாக இருக்கின்றது. இதனையே தைத்திரிய உபநிடதப்பாடல் ஒன்று "அவன் மக்களுக்காகப் பலவாக ஆடுகின்றான் என்று குறிப்பிடுகின்றது." இவ்வாடல் வேதாகமங்கள் இறைவனை வேண்டி துதித்தன் பயனாகாவும் தென்திசை வாழ்ந்திட திருநடனம் செய்தான் என்றும் கடம்பவன புராணத்தின் குறிப்புரையில் தண்டபாணி தேசிகர் உரை எழுதியுள்ளார். பொதுவாக எல்லா கோயில்களிலும் நடராசர் உருவம் தெற்கு நோக்கி அமைந்து இருக்கும்.

இக்காட்சியினை திருவிளையாடல் புராணம் எழுதிய பரஞ்சோதியார் செந்தமிழ்மொழியின் மீதும், தென்றல் காற்றின் மீதும் விருப்பம் கொண்டமையால் இறைவன் தெற்கு நோக்கி நடனம் புரிகின்றான் என்கிறார்.

இறைவன் திருமேனியும் பின்தாழ்சடையும் திருநடனமும் காணப் பெற்றவர்கள் என்றும் முத்தி இன்பம் பெறுவர்கள். ஐயன் ஆடல் எப்போதும் தனித்து நின்று ஆடாமல் உமையம்மை காணவே இறைவன் ஞான நடனம் புரிகின்றான். குமரகுருபரர் அதற்கு ஒரு விளக்கம் தருகின்றார் பால் அருந்தும் குழந்தையின் குடர் கசப்பு மருந்தை செரிக்கும் ஆற்றல் அற்றது எனவே தாய் மருந்தை தான் உண்டு பாலின் வழியாக மருந்து அக்குழந்தைக்கு சேரும்படி செய்வாள் போல ஆடல் ஒலியின் அருட்பயனை அம்பிகை பெற்று உயிர்களுக்கு வழங்கிவருகிறாள். ஆடலைக் காண்பதற்கு ஞானக்கண் வேண்டும் என்கிறார் திருமூலர். ஆடல் சிங்கார நடனம், ஆனந்த நடனம், பரமானந்த நடனம் எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

திருமந்திரத்தின் ஒன்பதாம் தந்திரத்தில் திருமூலர் திருகூத்துதரிசனம் என்ற பகுதியில் ஐந்து வகையான திருக்கூத்து தரிசனங்களை எண்பத்திரண்டு பாடல்களில் விளக்குகின்றார்.

1) சிவானந்தக் கூத்து — முத்தர்க்குப் பேரின்பம் விளைவிப்பதாகும்.

2) சுந்தரக் கூத்து — பொருள்களும் உயிர்களும் முறை தழுவச்செய்வதாகும்.

3) பொற்றில்லைக் கூத்து - அண்டத்தின் நடுவுள் நின்றாடுவதாகும்.

4) அற்புதக் கூத்து — ஐந்தொழில் நடத்துவதாகும்.

5) பொற்பதிக் கூத்து - உயிர்களின் உள்ளங்களில் நின்றியற்றுவதாகும்.

அண்டத்தில் ஆடும் ஆடல் தூலம் அது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என ஐந்தொழிலாக நடைபெறும். பிண்டத்தில் ஆடுவது சூக்கும ஆடல் ஆகும். இவ்ஆடல் உயிரின் உணர்வைக் கடந்து நின்று மூத்த ஆன்மாக்களுக்கு அரங்காக அமைவதும், உயிர்களோடு ஒன்றி உடனாகிச் செய்தருளும் ஆடல், காட்டும் உபகாரமாகவும் காணும் உபகாரமாகவும் அமையும். புளியைக் கண்டவர்களுக்கு நாவில் நீர் ஊறுதல் போல் இறைவன் திருக்கூத்து கண்டவர்களுக்கு கண்ட அளவில் இன்பம் பெருகுதல் இயல்பாகும். பிரமாண்டத்தில் உள்ளது பூஇன்ப நுகர்வு அண்டம், யோகத்திற்கு வாயிலாக உள்ள அண்டம், நீடியவாழ்வளிக்கும் பழைய அண்டம், பாசத்தின் நீங்கியோர் வாழும் அண்டம் முத்தாண்டம் மோகத்தை பயக்கும் அண்டம், உடல்வடிவ அண்டம், அவாநிரம்பாது துன்புறுபவர்களுக்கு அண்டம், தாகாண்டம் இவை அனைத்திலும் எங்கள் ஐயன் ஆடல் புரிகின்றார். யானையை நெறிப்படுத்தும் தோட்டியைப் போல மக்கள் உள்ளங்களில் தீது நீக்கி அவர்கள் மனத்தில் நன்நெறி நிலைக்கும் படியாக உயிர்களின் சுழுமுனை நாடியில் தங்கி இறைவன் ஒலி எழுப்பி ஆடுகின்றான். அவற்றின் பயனாய்

மக்கள் உள்ளத்தில் அறிவு நெறி, அன்பு நெறி வளர்கின்றது. உயிர்கள் முழுவதையும் அழித்து முற்றழிப்புச் செய்து ஆனத்தியென்னும் திருக்கூத்தாடினான். உலகப் படைப்பைச் செய்து நவ கூத்தாடுகின்றான். உயிர்களின் அறிவில் தங்கி ஞானக் கூத்தாடுகின்றான். அது உயிர்களுக்கு போகத்தைத் தருகின்றது. அது உலகபோகம், சிவபோகம் என இரண்டாக அமையும் ஆடலில் இன்பம் காண்பவர்களுக்கு நீண்ட ஆயுளும், மெய்ந் நடுக்கம், விழுதல் எழுதல் சோர்தல்கள் இல்லாமல் போகும். இதனால் தம்மையும் அறியாது தன்வயம் இழப்பார்கள். அதனால் உள்ளத்தில் புறப்பொருளைத் தேடும் நாட்டம் குறையும். புத்தி புலன்கள் மேல் செல்லாது, உயிர்களுக்கு உலக ஆசை உண்டாகாது. பிறப்பைத் தருகின்ற வித்து முளைக்காமல் கெடும். இறைவன் உலகை அழிக்க புகுந்து காளியோடு ஆடுகின்றான். பொன்மலையில் ஆடுகின்றான், சுடுகாட்டில் பேய்க்கூட்டத்தில் நடுவில் ஆடுகின்றான், உலகத்தில் ஆடுகின்றான், நீர்முதலிய நான்கு பூதங்களினும் ஆடுகின்றான், பலநாள் பொருந்தி தில்லை அம்பலத்தில் ஆடுகின்றான் இவ்வாறு எல்லாவற்றிலும் பற்றுதலின்றிக் கலந்து நின்று ஆடுகினறான்.

## சாத்திரகளில் கூத்து பற்றியப் பதிவுகள்:

ஐயன் ஆடலை மூன்று வகையாக சாத்திர நூல் வகைப்படுத்துகின்றது. ஊனநடனம், ஞானநடனம், ஆநந்தநடனம் பற்றி உமாபதி சிவம் எழுதிய திருவருட்பயன் என்கிற நூலும் மனவாசகம் கடந்தார் எழுதிய உண்மை விளக்கம் என்கிற நூலும் விளக்குகின்றது. யான், எனது என்னும் செருக்கு அற்றவர்களே

திருநடனத்தின் இயல்பை அறிவார்கள். நடனத்தின் பயனாய் பிறப்பை அறுப்பார்கள் என்கிறார் உண்மை விளக்க ஆசிரியார்.

"ஊனநடனம் ஒருபால் ஒருபாலா
ஞானநடனம் தானடுவே நாடு"-

<u>ஊனநடனம்:</u>

ஊனநடனத்தில் தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என்கிற மூன்று நடனமும் அடங்கும். இந்நடனத்தில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்னும் ஐந்தொழில்கள் நடைபெறுகின்றன. உயிர்களின் பிறப்பு நிலையில் நிகழ்வதாகும் உயிர்களுக்குக் சிற்றறிவைச் கொடுக்கும். திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டுள்ள திருநடனம் செய்து உயிர்களுக்குத் துன்பத்திற்கு காரணமான பிறப்பை அறுக்கின்றது. ஐந்தெழுத்தில் நகாரம், மகாரம் என்ற எழுத்துக்கள் ஊன நடனத்தைக் குறிக்கும் என்கிறார் உமாபதிசிவம்.

மலபரிபாகம், இருவினையொப்பு, சத்திநிபாதம் அடைந்த ஆன்மாக்களிடத்தில் இறைவன் ஞான நடனத்தை நிகழ்த்துகின்றான். ஞான நடனத்தால் துடியை அசைத்து மாயையினை உதறச் செய்கிறான். "தீ ஏந்தியுள்ள கையால" தொல்வினைகள் முளையா வண்ணம் சுடுகின்றான். "ஊன்றிய திருவடியால்" ஆணவ மலத்தின் செயல்களான ஆவாரகசக்தி, (மறைத்தல்) அதோநியமிகாசக்தி (கீழ்படுத்துதல்) என்கிற இருவகை செயல்களையும் நீக்குவான். "எடுத்த திருவடியால்" கேவல, சகல நிலையில் ஏறி, இறங்கும் உயிர்களை அவற்றில் இருந்து மீளச்செய்கிறான். "அபயகரத்தால்" உயிர்களைத் துரியாதீதம் என்கிற ஆனந்தத்தில் அழுத்துகின்றான்.

ஞான நடனம்:

வீடுபேற்று நிலையில் நிகழ்கிறது. இவ்வாடல் நிறையறிவைச் செய்யும். ஐந்தெழுத்தில் உள்ள சிகாரம், வகாரம் என்கிற எழுத்துக்கள் ஞான நடனத்தைக் குறிக்கும் என்கிறார் உமாபதி சிவம்.

ஆனந்த நடனம்:

ஐயன் ஆனந்த ஆடல் உயிர்களுடைய மலத்தின் ஆற்றலை விடுவித்து ஞேயத்தில் அழுந்தச் செய்து, உயிர்களுக்கு எல்லாம் ஒன்றாகத் தோன்றி திரிபுடி ஞானமாக காணும். பின்னர் சிவானந்த இன்பத்தை பருகச்செய்வான்.

உயிர்கள் சிற்றிரவு உடையவையாகும். உயிர் சுட்டி அறிந்தே தெரிந்துக் கொள்ளும் ஆற்றல் கொண்டதாகும். இறைவனை குறிகள், உருவங்கள் வழியாகவே இறைவனை அறியமுடியும். ஞாயிற்றை நம் காண்ணுக்கு காட்டுவது ஞாயிற்றின் கதிர் ஒளியே ஆகும். அதுபோன்று இறைவனின் அருளை உணர்வதற்கு ஆகிய உருவம், அருவம், அருஉருவ திருமேனிகளே வழிகாட்டியாக அமையும். உயிர்களை மாறிலா மகிழ்ச்சியில் மலரச் செய்வதே திருஆட்லின் பயனாகும். திருநடனத்தின் கீழ் அண்டங்கள் ஏழு, கடல் ஏழு, தீவு ஏழு, ஏழு பிறப்பு, கருவிகள் ஏழு, வேட்கைகள் ஏழு, சாந்திகள் ஏழு என அவற்றை தொழிற்படுத்தும் எல்லாவற்றையும் அடக்கி தன்னுடைய தன்மையில் நின்று ஆடல் புரிகின்றான் திருமந்திர பாடல் (2737). திருவுருவங்கள் எல்லாம் இறைவன் பெருமையை கூறுவதாகும். ஐயன் ஆடல் அசைவு உலகையும் உயிர்களையும் இயக்குகின்றது. ஆடல் அசைவின் நுட்பத்தை அறிந்து பார்த்தாலும் அறியாது பார்த்தாலும் என்றும் இன்பம் பெருகுமே.

## ஆறுமுகமான பொருள்

1. கந்தப் பெருமானுடையகருணைகூர் முகங்கள் ஆறும் ஆறுகுணங்களே என்ப. அவ்வருட்குணங்கள் ஏனைய தேவர்களிடம் இல்லை.

அவ்வருட்குணங்களாவன :

1. முற்றறிவுடைமை, 2. வரம்பிலின்பமுடைமை, 3. இயல்பாகவே பாசங்களில் நீங்குதல், 4. தம்வயமுடைமை, 5. பேரருளுடைமை, 6. முடிவிலாற்றலுடைமை.

இதனை வடமொழியில் முறையே சருவஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரத்வம், அலுப்தசக்தி, அநந்தசக்தி என்பர்.

நிராமயாத்மா என்ற குணம் அநாதிபோதத்திலும் விசுத்த தேஹம் என்ற குணம் அலுப்தசக்தியிலும் அடங்கி எண்குணம் ஆறாகுமாறு காண்க.

2. முலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களே ஆண்டவனுக்கு ஆறுமுகங்கள் என்ப.

3. ஆதிசக்தி, பராசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சாசக்தி, குடிலாசக்தி என்ற ஆறு சக்திகளே ஆறுமுகங்கள் என்ப.

4. அகர, உகர, மகர, நாத, விந்து, கலை என்ற ஆறுமே ஆறுமுகங்கள் என்ப.

5. மந்திரம், பதம், வன்னம், புவனம், கலை, தத்துவம் என்ற அத்துவாக்கள் ஆறுமே ஆறுமுகங்கள் என்ப.

6. ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்ற மற்றொரு வகையான குணங்கள் ஆறுமே ஆறுமுகங்கள் என்ப.

7. சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சௌரம், சாக்தம் என்ற ஆறு சமயங்கட்குத் தானே தலைவன் என்று இறைவன் ஆறு தலையோடு விளங்குகின்றனன்.

8. ஆறுமுகங்களிலிருந்து வெளிப்படும் பிரகாசங்களாவன : ஞானப்ரகாசம், ஞானானந்தப்ரகாசம், சர்வ ஞானவியாபகப்ரகாசம், சுத்தஞான சாட்சிப்ரகாசம், சர்வபரி சுத்த பிரம ஞானானந்த அருட்ப்ரகாசம், அநாதிநித்ய பிரமஞானானந்த சிவப்ரகாசம்.

9. சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், ஜோதிடம், கல்பம் என்ற அங்கங்கள் ஆறுமே ஆறுமுகங்கள் என்ப.

10. கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல் என்ற ஆறு திசைகளுமே ஆறுமுகங்கள் என்ப.

இங்ஙனம் ஆறுமுகங்கட்கு எண்ணில்லாத விளக்கங்கள் உள. அவற்றையெல்லாம் அவனருளறிவு கொண்டு ஆய்ந்துணர்க.

– திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்



வடக்குக் கோபுரமும், சிவகங்கைத் தீர்த்தமும்

## தில்லைச் சிதம்பரம் - நித்திய வழிபாடுகள்

காலை 6.00 மணிக்கு நடை திறக்கப்பெறும் பின்னர் பால் நைவேத்யம் நிகழும்.

பால் நைவேத்யம் என்பது பள்ளியறையில் வெள்ளி ஊஞ்சலில் இருக்கும் ரத்தினம் பதித்த தங்கப் பாதுகைகளை பால், பழம் நிவேதனம் செய்யப் பெற்றுத் தங்கச்சிவிகை (பல்லக்கு) மீது அமர்த்தி மேளதாள் முழங்க, காளம் ஒலிக்க சிற்றம்பலம் எனும் சித்சபைக்குக் கொண்டு சேர்க்கும் நிகழ்வு. பிற சிவாலயங்களில் பள்ளியறை மூர்த்தம் தனியாக இருக்கும். சிதம்பரத்தில் பாதுகை கொண்டு செல்லப் பெறுகிறது.

பால் நைவேத்யத்தை தொடர்ந்து பகலில் மூன்றும், மாலை இரவில் மூன்றும் ஆக ஆறுகாலங்களில் கனக சபையில் ஸ்படிக லிங்கத் திருமேனிக்கு அபிஷேகம், ஆராதனை தீபாராதனை நிகழும்.

பகல் காலை சந்தி : காலை 8.00 மணி
இரண்டாம் காலம் : காலை 10.30 மணி

படிக லிங்க அபிஷேகத்தைத் தொடர்ந்து இரத்தின சபாபதி என்னும் மாணிக்க நடராசருக்கு அபிஷேக ஆராதனை நிகழும். முன்னும் பின்னும் தீபாராதனை செய்யும் போது மாணிக்க நடராசர் அற்புதமாக மிளிர்ந்து கண்ணுக்கு விருந்தாவார். இதனைக் கண்ணுற்று மகிழ்தல் அவசியம்.

உச்சிக்காலம் : பகல் 12.00 மணி
மாலை - இரவு
மாலை 5.00 மணிக்கு நடை திறப்பு
சாயரட்சை : மாலை 6.00 மணி
இரண்டாம் காலம் : இரவு 8.00 மணி

இரண்டாம் காலத்திற்கு முன்னர் கதவுகள் தாளிடப் பெற்று ரகசிய பூசை நிகழும்.

அர்த்தசாமம் : இரவு 10.00 மணி

சிற்சபையிலிருந்து இறைவனின் பாதுகைகளை சிவிகையில் (பல்லக்கு) அமர்த்தி மேளதாளங்கள், சங்கொலி முழங்க வலம் வந்து பள்ளியறை கொண்டு சேர்க்கும் நிகழ்வு. பள்ளியறை வெள்ளி ஊஞ்சலில் அம்பாளுடன அமர்த்தப் பெற்று நைவேத்யம், தீபாராதனை நடத்தப்பெறும். பின்னர் சண்டிகேசுவரர், காலபைரவர், அர்த்தசாம அழகர் தீபாராதனையுடன் அர்த்தசாம வழிபாடு நிறைவுறும். அனைத்து ஆலயங்களிலும் எழுந்தருளியுள்ள இறைவனது திருவருட்கலைகள் அனைத்தும் தில்லை மன்றுள் அர்த்தசாம வேளையில் வந்து ஒடுங்கி, மறுநாள் காலை உரிய இடம் செல்லும். எனவே சிதம்பரம் கோயிலில் அர்த்தசாமம் கண்ணுற்று மகிழ்தல் அவசியம்.

### பிரதோஷ வழிபாடு :

அமிர்தம் வேண்டி திருப்பாற்கடலைக் கடையும்போது வெளிப்பட்ட விஷத்தினை சிவபெருமான் உண்டு நீலகண்டன் ஆகிய தேவர்களையும், அசுரர்களையும் காப்பாற்றிய காலம் பிரதோஷகாலம். பிரதோஷ வேளை ஆனந்தத் திருநடனத்தை தேவரும், முனிவரும், திருமாலும் கண்டு களித்தனர். எனவே சிதம்பரத்தில் பிரதோஷ காலம் காண்பதும் வழிபடுவதும் சிறப்பும் அவசியமும் ஆகும்.

**வருடத்திற்கு ஆறு அபிஷேகங்கள் :**

சித்திரை திருவோணம், ஆனி உத்திரம், ஆவணி வளர்பிறை சதுர்த்தசி, புரட்டாசி வளர்பிறை சதுர்த்தசி, மார்கழி திருவாதிரை, மாசி வளர்பிறை சதுர்த்தசி.

ஆனி, மார்கழி அபிஷேகங்கள் ஆயிரங்கால் மண்டபத்தில் நடைபெறும். ஏனைய நான்கும் கனக சபையில் நிகழும்.

**திருவிழாக்கள் :**

ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் திருவாதிரை தரிசனமும் பத்து நாள் திருவிழாக்கள். இவை தேவார நூல் ஆசிரியர் காலத்திற்கு முற்பட்ட தொன்மை வாய்ந்த திருவிழாக்கள்.

முதல் நாள் கொடி ஏற்றமும், இரவு மத்தள பூசையும் நடைபெறும். இரண்டாம் நாள் தொடங்கி ஏழாம் நாள் வரை முறையே சந்திர பிரபை, சூரிய பிரபை, வெள்ளி பூத வாகனம், வெள்ளி ரிஷப வாகனம் (தெருவடைத்தான்), வெள்ளி யானை வாகனம், தங்கக் கைலாய வாகனம் ஆகிய இவற்றில் பஞ்சமூர்த்திகள் வீதி வலம் வருவர். பகலில் தங்கம் வெள்ளி மஞ்சங்களில் திருவுலா நிகழும். ஐந்தாம் நாள் கொடிமரம் அபிஷேக பூசை நிகழும். எட்டாம் நாள் தங்க ரதத்தில் பிட்சாடனர் எழுந்தருளி வீதிவலம் வருவார். நள்ளிரவில் சோமாஸ்கந்தர் குதிரை வாகனத்தில் எழுந்தருள்வார். ஒன்பதாம் நாள் காலை சிற்சபையிலிருந்து நடராசர் - சிவகாமி அம்மன் ரதம் வந்து சேருவர். பின்னர் வீதிவலம், மாலை தேர் நிலை வந்து சேரும். பத்தாம் நாள் அதிகாலை ஆயிரங்கால் மண்டபத்தில் மகாபிஷேகமும், அலங்காரமும் நிகழும். சிற்சபை ரகசிய பூசையைத் தொடர்ந்து தீர்த்தவாரி, ஆனந்த நடராசர் தரிசனம் சிறப்புற நடைபெறும். நடராஜர், சிவகாமி சிற்சபை திரும்புவர்.

பதினோராம் நாள் இரவு சுவாமி அம்மாள் முத்துப் பல்லக்கு காட்சி நிகழும்.

ஒவ்வொரு நாளும் யாக சாலை பூசை, அலங்காரம், வீதி உலாவிற்கு முன் நிகழும். நாதஸ்வர இசை விருந்து, திருமுறை ஓதுதல் இவற்றை தில்லைவாழ் அந்தணரும், பொதுமக்களும், விருந்தினரும் திரண்டு, கண்டு கேட்டு இன்புறுவர். சிவனடியாரும், குழந்தைகளும், பெரியோரும் மெய் மறந்து ஐந்தெழுத்தை ஓங்கி விளிப்பதும், தாளமிடுவதும், காளம் ஒலிப்பதும், சங்கு ஊதுவதும், ஆடுவதும், பாடுவதும், பரவுவதும் காணற்கரிய கண்கொள்ளாக் காட்சியாகும்.

மார்கழி திருவாதிரை தரிசன விழா நாட்களில் மாலை 6.00 மணியளவில் மாணிக்கவாசகரை கூத்தப் பெருமான் முன் எழுந்தருளச் செய்து, திருவெம்பாவை பதிகத்தின் 20 பாடல்கள் பாடப்பெறும்.

ஒவ்வொருப் பாடல் நிறைவுக்குப் பின் தீபாராதனை (மாணிக்கவாசக தீபாராதனை) நிகழும். ஒன்பது நாட்கள் சிற்றம்பலத்தின் எதிரேயும், திருத்தேர் நாளில் நிலை கண்ட தேரின் முன்னேயும் பாடல்கள் பாடப்பெறும். ஆயிரங்கால் மண்டபத்தினின்று புறப்பட்டு பஞ்சமூர்த்திகட்கும், பக்தர்கட்கும், சிவகாமியம்மை காண கூத்தப்பெருமான் முன்னும் பின்னுமாக மேளதாள முழக்கத்துடன் காளதாளம் ஒலிக்க எழில் நடனக்காட்சி அருளிச் சிற்றம்பலத்திற்கு எழுந்தருளும் காட்சியே தரிசனம் எனப்பெறும். இதனை ஞானாகாச சித்சபாப்ரவேசம் என்பது மரபு.

**தரிசனம் – விளக்கம் :**

சிவஞானச் செல்வர் தம் நெஞ்சத்தாமரையில் உயிர் துடிப்பாகத் தொடர் நடம் புரிந்து ஆளும் நடராசப் பெருமானை நெஞ்சத்தினின்று எழுந்தருளச் செய்து, புருவ மத்தியில் தியானித்து, ஆறு ஆதாரம் கடந்த ஏழாம் நிலை (தலை உச்சிக்கு ஒரு அடிமேல்) யாம் மேலிடத்திலுள்ள ஆயிரம் இதழ் தாமரை மேல் எழுந்தருளச் செய்து, திருவருளோடு ஒன்றியிருந்து மீண்டும் புருவ நடுவில் கண்டு, நெஞ்சத் தாமரையில் எழுந்தருளச் செய்வது அகப்பூசை. இந்த அகப்பூசையினை நினைவு படுத்துவதே ஆடல்வல்லான் மேற்கொள்ளும் தரிசனத் திருவிழாவாம்.

ஐப்பசிப் பூர நாளில் சோழ மன்னர் காலந்தொட்டு சிவகாமி அம்மனுக்கு பூரச்சலங்கை உற்சவமும், மறுநாள் திருக்கல்யாணமும் நிகழ்கின்றன.

ஆடிப்பெருக்கு (ஆடி - 18) நாளில் கொள்ளிடக் கரையில் தீர்த்தவாரி. மாசி மகத்தன்று கிள்ளையில் கடற்கரைத் தீர்த்தவாரி. தைப்பூச நாளில் சிவகங்கைக் குளத்தில் தீர்த்தவாரி. மாலை 3.00 மணியளவில் திருநடனக் காட்சி.

மாசி சிவராத்திரி அர்த்தசாமம் தொடங்கி இரவு நான்கு சிறப்புக் காலங்கள் நிகழும். நாட்டியாஞ்சலி விழா ஆறுநாட்கள் நிகழும். உலகெங்கும் உள்ள நாட்டியக் கலைஞர்கள் நடராசருக்கு அஞ்சலி செய்து பார்வையாளர்களை மகிழ்விப்பர்.

**சிற்றம்பலம் :**

தொடக்கத்தில் 64 கலைகளை குறிக்கும் வண்ணம் 64 கைச்சாத்துக்களைக் கொண்ட மரக் கட்டடமாக விளங்கிய சிற்றம்பலக் கூரை, பின்னர் மனிதன் ஒருநாள் விடும் மூச்சின் எண்ணிக்கையைக் குறிக்கும் வண்ணம் 21600 திருவைந்தெழுந்து எழுதப்பெற்ற பொன் ஓடுகள் வேயப்பெற்றது. பொன் ஓடுகள் பொருத்தப் பயனுற்ற 72000 ஆணிகள் மனித சுவாச ஆதாரமாகிய 72 நாடிகளைக் குறிப்பன. சிற்றம்பலத்தின் நாற்புறமும் சுற்றியுள்ள புறத்தே வெள்ளித்தகடு போர்த்தப் பெற்ற சந்தனப் பலகணிகள் 96, சைவ சித்தாந்தத் தத்துவங்கள் 60 ஆகியவனவற்றை உணர்த்துவன. மனித மூச்சு எண்ணிக்கை 21600-ஐ மிகாவிடில் ஆய்ள்காலம் 120 ஆண்டுகள். மிகின் ஆயுள் குறையவும், குறையின் ஆயுள் கூடவும் ஏதுவாகும். மதியால் விதியை வெல்லலாம். இதன் விளக்கம் மூச்சின் சந்திரகலை எண்ணிக்கையைக் குறைத்து ஆயுள் குறைவை வெல்லலாம் என்பதே!

சிற்றம்பலக் கூரையின் மேல் இருக்கும் 9 தங்கக் கலகசங்கள் 9 சக்திகளை குறிப்பன. சிற்றம்பலக் கூரையை தாங்குகிற 28 மரத்தூண்கள் சிவாகமங்களையம், 18 கல்தூண்கள் பதினெண் புராணங்களையும் குறிக்கின்றன. சிற்றம்பலம் நடுவே உள்ள பீடத்தின் 10 தங்கத் தூண்கள் வேதங்கள் நான்கினையும், ஆகமங்கள் ஆறினையும் உணர்த்துவன. சிற்றம்பல வாயிலில் உள்ள வெள்ளித் திருக்களிற்றுப் படிகள் ஐந்தும் பஞ்சாட்சரப்படி திருவைந்தெழுத்தை நினைவூட்டுவன.

**நன்றி !**

- திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர்,

கலைமாமணி.சிவத்திரு.க. **வெள்ளைவாரணனார்**

தில்லைப் பெருங்கோயில் வரலாறு

# திருமுருகாற்றுப்படை

பிரம்மஸ்ரீ உ. வெங்கடேச தீக்ஷிதர்

வேத மந்திரங்களில் ஓம் எனத் தொடங்கி ஓம் என முடியுமாறு இரண்டு தெய்வங்களுக்கு மட்டுமே அமைந்துள்ளன.

ஒன்று, ஓம் ஈசான ..... ஸதாசிவோம் என்று அமைந்த ஓங்காரத்தின் விளக்கத்தை முருகப் பெருமானிடமிருந்து கேட்டறிந்த சிவபெருமானுக்கு உரியது.

மற்றொன்று, ஓம் குமாரஸ்சித் பிதரம் ..... ஸுப்ரஹ்மண்யோம் என்று அமைந்த பிரணவத்தை உபதேசித்த முருகப் பெருமானுக்கு உரியது.

தேவர்களை வருத்திய சூரன் எனும் அரக்கனை தன் படைகள் கொண்டு வதம் செய்தவர். அதுவே சூரஸம்ஹாரம். ஐப்பசி மாத வளர்பிறை ஆறாவது தினமாகிய ஸ்கந்த சஷ்டி. அன்று முருகப் பெருமானுக்கு மிக உகந்த நன்னாள். அசுரரை வதம் செய்த எதிர்ப்புகளை நீக்கிய, மகிழ்வை அளித்த பொன்னாள். முருகனை வழிபட்டால் முன்வினைகள் நீங்கி முழுமையான வாழ்வு கிட்டும்.

தமிழ்க் கடவுளாக போற்றப்படுபவர் முருகப் பெருமான். தமிழ்ச் சங்கத்தினை காத்தருளிய கடவுள். காலக்கணக்கின்படி நமக்குக் கிடைத்திருக்கும் தமிழ் நூல்களை வகைப்படுத்திப் பார்த்தோமானால் சங்க இலக்கியங்களே முதல் வரிசையில் இருக்கின்றன (சங்க இலக்கியங்களுக்கு முன்னதான – குமரிக்கண்டம், பஃறுளியாறு காலத்திய – இலக்கியங்கள் கடல் கொண்டதாகத் தமிழறிஞர்கள் கூறுகின்றனர்).

சங்க இலக்கியங்களிலுள்ள அகநானூறு மற்றும் புறநானூறு போன்றவை காதல், வீரம், அறம் போன்றவற்றை இயம்புகின்றன. மேற்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய பத்துப்பாட்டின் முதற்பாட்டு திருமுருகாற்றுப் படை ஆகும். தமிழன்னையின் நெற்றிப் பொட்டு போல அமைந்தது. பத்துப்பாட்டில் முதன்மையானதாக அமைவது திருமுருகாற்றுப்படை ஆகும். இது பத்துப்பாட்டு தொகுப்பிற்கு கடவுள் வாழ்த்து போலவும் அமைந்திருக்கின்றது.

நக்கீரர் இயற்றியது திருமுருகாற்றுப்படை. தமிழிலக்கியத்தின் முதல் தெய்வத்தினைப் போற்றி அமைந்த தன்னிகரற்ற திருமுருகாற்றுப்படை – முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளைப் போற்றிச் சொல்வதாக அமைந்தது. தமிழிலக்கியத்தின் முதல் காவியமாக தமிழ்க் கடவுளான முருகனைப் பற்றி அமைந்திருப்பது என்னே! பொருத்தமாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் மிக முக்கியமான இலக்கியமாக விளங்குவது ஆற்றுப்படை என்பதாகும் (ஆறு – வழி, படை – காட்டுதல் = தெய்வத்திடம் வழிகாட்டும் பாடல்கள், அதாவது தான் பெற்ற இன்பத்தை மற்றோரும் பெறச் செய்யல்).

தமிழ்க் கடவுளான முருகனின் அருள் பெற்ற ஒருபுலவன் கந்தனருள் பெற விரும்புபவருக்கு நல்வழி காட்டும் வகையில் அமைந்தது இந்நூல். திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை தலங்களின் இயற்கை வளம், முருகன் உருவச் சிறப்பு, ஊர்திகள், மாலைகள், கொடிகள் பற்றிய செய்திகளுடன் அமைந்துள்ளது. திருமுருகாற்றுப்படை, சுவாமி மலை முருகன் ஆலயத்தில் அர்ச்சகர் ஈரமான ஆடையுடன் மிக ஆசாரமாக பூசைகள் புரியும் வரலாற்றுச் செய்திகளைக் கூறுகிறது.

இந்நூலின் சிறப்பை **"பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றவரோ எத்துணையும் பொருட்கிசையும், இலக்கணமில் கற்பனையே"** என மனோன்மணியமும், மூத்தோர் பாடியருள் பத்துப்பாட்டு என தமிழ்விடு தூதும் போற்றுகின்றன.

பண்டை இலக்கியமான இதில் திருவேரகம், பழமுதிர்ச்சோலை முதலிய இடங்களிலுள்ள ஆலயங்கள் போற்றப்படுகின்றன. தொன்றுதொட்டே ஆன்மீக உணர்வை உடையவர்கள் தமிழர்கள் என்பதை இந்நூல் எடுத்துக் காட்டுகிறது.

பழங்கால இலக்கியப் புலவரான நக்கீரர் ஒரு சமயம் தவத்திலிருந்தபோது அருகிலிருக்கும் சுனையிலிருந்து சலசலப்பு எழுந்தது. தவம் கலைந்து பார்த்தபோது சுனையில் ஒரு வித்தியாசமான படைப்பாகப் பறவையும், மீனும் இணைந்த பிணைப்பாகிய உருவைக் கண்டார். மீன் தான் வாழ, பறவையை நீருக்குள் இழுத்தது; பறவையோ தான் வாழ வானில் பறக்க சிறகடித்தது. இரண்டும் வெவ்வேறு வாழ்விடங்களைக் கொண்டவை. ஒன்று வாழ இன்னொன்று மடிய வேண்டிய படைப்பை கடவுள் படைத்தானே என்று எண்ணி தவத்தை சிறிது மறந்தார். உடனே கற்கிமுகி எனும் பூதம் இவர் முன் தோன்றி, இதைப் படைத்தது நானே, சிவ வழிபாட்டில் மனம் வேறானவர்கள் ஆயிரம் பேர்களை சிறைப் பிடித்து பலி கொடுக்கும் முயற்சியில் நீங்கள் ஆயிரமாவது மனிதர் எனக் கூறி, நக்கீரரை சிறையில் அடைத்தது.

நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாட, முருகனின் வேல் இவருடன் சிறையிலிருந்த தவஞானியரையும் விடுவித்தது என்று தனிப்பாடல் ஒன்று திருமுருகாற்றுப்படை தோன்றிய வரலாற்றைக் குறிக்கிறது. திருமுருகாற்றுப்படையை படிப்பதனால் அறுபடை வீடுகளிலுள்ள முருகப் பெருமானை தரிசித்த பலன் கிடைக்கும்.

முருகப் பெருமான் ஒரு வரப்ரஸாதி. சட்டியில் இருந்தால் ஆப்பையில் வரும் எனும் வழக்கு மொழிக்கு – சஷ்டி தினத்தில் விரதம் இருந்து முருகனை வழிபடும் மங்கையருக்கு அகப்பையாகிய கருப்பையில் கரு வளர்ந்து வம்சம் விளங்கும் என்பது தான் முழு அர்த்தமாக விளங்கும். முருகனை தரிசித்தால் கிடைக்கும் பலன்களை ஸ்ரீ செல்வ முத்துக் குமார ஸ்வாமி பிள்ளைத் தமிழ் பாடல் விளக்குகின்றது.

"பங்கயம் திகழ் தகு சரவணைப் பொய்கை மூழ்கில் பவத்திருளை நீக்கி வைக்கும்

படியில் நின் கிரியை பிரதட்சிணம் செயதிடில் பாக்கியங்கள் வந்தடுக்கும்

துங்கமிகு நின் பாத சேவை செய்வோர் மனத்துயரங்கள் தனை அகற்றும்

துய்ய வெண்பொடி நுதலில் இட்டிடில் பிரபஞ்ச தோஷ சங்கைகள் பறக்கும்

தங்கு கிருத்திகை விரதம் உற்றவர்கள் பால் பிணிகள் சற்றும் அணுகாது காக்கும்

சஷ்டி விரதம் ஓம்பும் மலடிக்கு உன்னருள் புத்திர சந்ததி தனைக் கொடுக்கும்

மங்கல கல்யாண சுகுணங்கள் என் சொல்லுகேன் மோகவள்ளி குஞ்சரி மணாளா

வனசமலரயன் மதனையருள் சரஸ கோபால மருக சரவண முருகனே"

என்பது அப்பாடலாகும். முருகன் திருவடியைப் போற்றுவோம்!

..............................................

## ஐந்தெழுத்து ஐந்துந் தரும்

மனிதனுக்கு மிகவும் தேவையானவை ஐந்து பொருள்கள்.

1. நல்வாக்கு, வாக்கு செல்வாக்குடையதாகவும், இனிமையுடையதாகவும் அமைதல் வேண்டும்.
2. இனிய பால்சோறு.
3. நல்லார் இணக்கம்.
4. உயர்ந்த நற்குணங்கள்.
5. குறைவில்லாத செல்வம்.

இந்த ஐந்தும் **"சிவாய நம"** என்று ஜெபித்து திருநீறு தரிப்பதனால் எளிதில் உண்டாகும். இந்த இனிய கருத்தைக் கனியமுதம் போன்ற கவியால் இராமலிங்க அடிகளார் கூறுகின்றார்.

பாடற்கினிய வாக்களிக்கும் பாலுஞ் சோறும் பரிந்தளிக்கும்

கூடற்கினிய அடியவர்தம் கூட்டமளிக்கும் குணமளிக்கும்

ஆடற்கினிய நெஞ்சே ! நீ அஞ்சேல் என்மேல் ஆணைகண்டாய்

தேடற்கரிய திருவளிக்கும் சிவாய நமஎன் றிடுநீறே.

– திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்



ஸ்ரீ செல்வமுத்துக்குமார ஸ்வாமி (வைத்தீஸ்வரன் கோயில்)



ஓம் குஞ்சரி பதயே நமோ நம
ஓம் வல்லி பதயே நமோ நம
ஓம் சஸ்திர பதயே நமோ நம

ஓம் மயூர பதயே நமோ நம
ஓம் சஷ்டி பதயே நமோ நம
ஓம் குமார பதயே நமோ நம

உ

# திருமுருகன் திருப்புகழ்

இலக்கியவித்தகர்.

முனைவர். **இரா. அன்பழகன்**

புவனகிரி

உலக அரங்கில் இந்தியத் துணைக் கண்டத்துக்கு என ஒரு பெருமை உண்டு. உலகில் அருளாளர்கள் நிரம்பத் தோன்றிய நாடு என்பதே அது. இம்மண்ணில் வாழையடி வாழை என அருளாளர்கள் தோன்றியுள்ளனர். அவர்கள மனித இனம் மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும் என்பதைத் தம் நோக்கமாகக் கொண்டு பல அருளுரைகளைத் தந்து சென்றனர்.

எல்லோரும் இன்புற்று இருப்பதுவே அல்லாமல் வேறொன்று அறியேன் என்றார் தாயுமானவர். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க என்றார் திருவருட்பிகாச வள்ளலார். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றார் திருமூலர். பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும் என்றார் பாரதியார். இப்படி அருளாளர்கள் அனைவருமே மனித இனம் மகிழ்ச்சியாக வாழ வேண்டும் என்று வாழ்த்தினர் ; தாமும் வாழ்ந்து காட்டினர்.

இத்தகைய பெருமைக்குரிய அருளாளர்களில் கி.பி.15–ஆம் நூற்றாண்டில் தோன்றிய அருணகிரிநாதர் தனிப் பெருமைக்கு உரிய ஒருவராக விளங்குகின்றார். இவர் பாடிய திருப்புகழ் என்னும் நூல் ஞானக் களஞ்சியமாக விளங்கும் அருள் நூலாகும். முருகப் பெருமானால் அடி எடுத்துக் கொடுக்கப் பெற்று, அவனுடைய அருள் ஆணையின் வண்ணம் பாடப்பெற்றது திருப்புகழ். இதனை அருணகிரிநாதர் பல பாடல்களில் சொல்லி நெகிழ்வதைக் காண்கிறோம்.

**திக்குஅது மதிக்க வரு குக்குடமும், ரட்சை தரு**

**சிற்றடியும், முற்றிய பன்னிரு தோளும்,**

**செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு**

**செப்பு என எனக்கு அருள்கை மறவேனே**

**பாத பங்கயம் உற்றிட உட்கொண்டு**

**ஓதுகின்ற திருப்புகழ் நித்தம்**

**பாடும் என்பது செய்ப்பதியில் தந்தவன் நீயே**

**சித்திர கவித்துவ சத்தமிகுந்த**

**திருப்புகழைச் சிறிது அடியேனும்**

**செப்பு என வைத்து உலகில் பரவத் தெரி**

**சித்த அநுக்கிரகம் மறவேனே**

எனவரும் திருப்புகழ்ப் பாடல் தொடர்கள் முருகப்பெருமான் அருணகிரிநாதருக்குத் திருப்புகழ் பாட அருளும், ஆணையும் அளித்த திறத்தை உணர்த்துகின்றன.

திருப்புகழ்ப் பாடல்கள் முருகப் பெருமானின் அருளால் பாடப்பெற்றவை. ஆதலால் முருகனுடைய அருள் வலிமை பொலியும் பாடல்களாக அவை விளங்குகின்றன.

இப்பாடல்களுக்குரிய நுட்பமான பொருள்களை எல்லாம் அருள்மொழி அரசு வாரியார் சுவாமிகள் விளக்கம் செய்துள்ள திறம் உளங்கொள்ளத்தக்கது ஆகும்.

இருமல் உரோகம் முயலகன் எனத் தொடங்கும் பாடலுக்கு வாரியார் சுவாமிகள் எழுதியிருக்கும் விளக்கத்தை நூற்றில் ஒரு சான்றாகக் காணலாம்.

பரம குருநாதராகிய அருணகிரிப் பெருமாள் உலகில் உள்ள மக்களின் மீதுள்ள அளவற்ற கருணையால் பாடியருளியது இத்திருப்புகழ். இத்திருப்புகழை அன்பர்கள் நாள்தோறும் ஒருமைப்பட்ட உள்ளத்துடன் உருகிய சிந்தையுடன் ஓதினால் நோய்கள் விலகப் பெறுவார்கள். அன்றியும் நோய் தீண்டப் பெறார்கள் என்பது வாரியார் சுவாமிகளின் கூற்று.

<u>பயணத்திற்கு உணவு :</u>

திருப்புகழை இருப்பு அவல் என அருணகிரிநாதர் ஒரு பாடலில் குறிப்பிடுகின்றார். இருப்பு அவல் என்னும் இச்சொல்லிற்கு இரும்பு அவல் எனச் சிலர் பொருள் கொண்டனர்.

இரும்பு அவலைக் கடிப்பது கடினம். அதுபோல திருப்புகழைப் படிப்பது கடினம் என்பது அவர்கள் கருத்து.

ஆனால் திருப்புகழைப் கற்பது கடினம் என்னும் பொருள் தரும் இவ்விளக்கத்தை வாரியார் சுவாமிகள் ஏற்கவில்லை; இருப்பு அவல் என்னும் சொல்லிற்குப் பொருத்தமான விளக்கம் தந்து திருப்புகழின் பெருமை போற்றுகிறார்.

அயலூர் செல்பவர்கள் கையில் அவல் கொண்டு போவார்கள். அதனால் அதற்கு யாத்திரைத் தர்ப்பணம் என்று பெயர். அதையே அருணகிரிநாதர் இருப்பு அவல் என்று குறிப்பிடுகின்றார்.

பயணம் செல்லும்போது கையில் அவல் இருந்தால் பசி வந்தபோது அவலைப் பாலில் நனைத்துச் சருக்கரை கலந்து உண்ணலாம் ; அல்லது உப்பும், எலுமிச்சம் பழ ரசமும் கலந்து உண்ணலாம். இவ்வாறு

இரைதேடும் பயணத்தில் வயிற்றுக்கு உதவும் அரிசி அவல் போல, இறைதேடும் பயணத்தில் ஆன்மாவுக்கு உதவும் அறிவு அவலாகத் திருப்புகழ் விளங்குகின்றது என்பதே இருப்பு அவல் என்பதன் உண்மையான விளக்கம் என்பதை வாரியார் சுவாமிகளின் உரைவழி உணர்ந்து கொள்கின்றோம்.

<u>பகைக்கு நெருப்பு :</u>

அருளாளர்களுடைய பாடல்களுக்குப் பகை வெல்லும் ஆற்றல் உண்டு. இதனைப் பல அருளாளர்களுடைய பாடல்கள் மெய்ப்பித்திருக்கின்றன. அருணகிரிநாதருடைய பாடலுக்கும் அத்தகைய ஆற்றல் உண்டு என்பதனை ஒரு நிகழ்ச்சியின் மூலம் வாரியார் சுவாமிகள் விளக்குகிறார்.

சினத்தவர் முடிக்கும் எனத் தொடங்கும் திருப்புகழ்ப் பாடலுக்கு வாரியார் சுவாமிகள் விரிவான முன்னுரை எழுதி உள்ளார்கள். இதில் இச்செய்தி சொல்லப்படுகிறது.

ஒருமுறை அருணகிரிநாதர், அடியார்கள் புடைசூழத் திருத்தணி சென்றார்கள். அப்போது திருப்புகழ்ப் பாடலை இசையுடன் பாடிக் கொண்டு திருத்தணி மலையை வலமாக வந்து கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் அங்கிருந்த சிலர் அருணகிரிநாதரையும், முருகப் பெருமானுடைய அடியார்களையும், அவர்கள் பாடிய திருப்புகழையும் எள்ளி நகையாடினர். அதனைக் கண்ட அருணகிரிநாதர் சினத்தவர் முடிக்கும் எனத் தொடங்கும் பாடலைப் பாடினார்கள்.

**சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்**

**செகுத்தவர் உயிர்க்கும் சினமாகச்**

**சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்**

**திருப்புகழ் நெருப்பென்று அறிவோம் யாம்**

உடனே அவர்கள் அனைவரும் எரிந்து போனார்கள். அதனைக் கண்ட "**கருணைக்கு அருணகிரி**" என்று உலகம் பாராட்டுகின்ற அருணகிரிநாதர் திருவுளமிரங்கி,

**நினைத்தும் அளிக்கும் மனத்தையும் உருக்கும்**

**நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்**

**நெருப்பையும் எரிக்கும் பொருப்பையும் இடிக்கும்**

**நிறைப்புகழ் உரைக்கும் செயல்தாராய்**

எனவரும் திருப்புகழ்த் தொடர்களைப் பாடினார்.

சாம்பற் குவியலான அவர்கள் அனைவரும் உயிர் பெற்று எழுந்தனர் ; திருப்புகழின் ஆற்றலை உணர்ந்து, அருணகிரிநாதரைப் பணிந்தனர். அருணகிரிநார் அவர்களை ஆட்கொண்டருளினார் என வாரியார் சுவாமிகள் திருப்புகழின் பொருட் சிறப்பை விளக்குகிறார்.

<u>பஞ்சாட்சரப் பாடல் :</u>

சிவாயநம என்னும் திருவைந்தெழுந்தின் சிறப்பினைப் பல பாடல்களில் அருணகிரிநாதர் எடுத்துரைக்கிறார். முருகப் பெருமானை நமசிவாய என்னும் மந்திரம் கொண்டும் சிந்தித்து அருள் பெறலாம் என்பதை நமசிவயோம் என கொஞ்சிக்களி கூர என்னும் திருப்புகழ்த் தொடர்களில் கூறுகின்றார்.

நமசிவயப் பொருளோனே என முருகப் பெருமானை அழைக்கின்றார். செருவெங்களத்தில் வந்த அவுணன் தெளித்து மங்க சிவமஞ்செழுத்தை விடுவோனே என்னும் தொடர்களில் முருகனின் வேலாக விளங்குவது திருவைந்தெழுத்து எனக் கூறுகிறார்.

உடுக்கை ஏந்திய திருக்கையிலே 'சி'கரமாகவும், நன்கு வீசும் திருக்கையிலே 'வ'கரமாகவும், அபயகரத்திலே 'ய'கரமாகவும், சுடர்நெருப்பு ஏந்திய திருக்கையிலே 'ந'கரமாகவும், முயலகனை மிதித்து ஊன்றிய திருவடியிலே 'ம'கரமாகவும் அமையச் சிவபெருமான் உலகினை இயக்கி ஐந்தொழில் திருக்கூத்து நிகழ்த்தி உயிர்களை உய்வித்து அருளும் திறத்தினை,

**"சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகரம் அபயகரம் – பார்க்கிலிறைக் (கு)**
**அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்**
**தங்கும் மகரமது தான்"**

என வரும் உண்மை விளக்கப் பாடல் இனிது விளக்குகின்றது.

சிவாயநம என்னும் திருவெழுத்து ஐந்தும் நடராசப் பெருமானுக்கு அங்கமாகவும் (உறுப்பாகவும்) உபாங்கமாகவும் (துணையுறுப்பாகவும்) அமைந்து அம்முதல்வன் நிகழ்த்தியருளும் ஐந்தொழில் ஆனந்த நடனத்தின் நுட்பங்களை இப்பாடல் புலப்படுத்துகின்றது.

ஆடவல்லான் பஞ்சாட்சர வடிவினனாக விளங்குகின்றான். அவனை அருணகிரிநாதர் முருகப் பெருமானாகவே கண்டு போற்றுகின்றார். **"கனக சபை மேவும் எனது குருநாத கருணைமுரு கேசப் பெருமாள் காண்"** என்பது அருணகிரிநாதரின் திருவாக்கு. எனவே குமரப் பெருமானையும் ஐந்தெழுத்து வடிவினனாகவே கருதலாம். ஆயின் அவனது திருக்கையின்கண் இலங்கும் வெற்றிவேலே ஐந்தெழுத்து வடிவம் என்கிறது திருப்புகழ். இதற்கேற்ப மேலைக் கோபுர வாயிலில் எழுந்தருள் புரிகின்ற குமரப் பெருமான் கந்த சஷ்டி சூரசம்ஹார உற்சவத்தின் போது வேல்வாங்கப் புறப்படும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். ஆட்டுக்கிடா வாகனத்தில் கம்பீரமான திருத்தோற்றத்தோடு, செங்குந்த நவவீரர் புடைசூழ, மல்லாரி இசை முழங்க, பல்லியம் கறங்க பொற்சபைக்கு எழுந்தருளி வேல்வாங்குகின்ற போது ஆயிரக்கணக்கான மக்கள் **"வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா"** என்று பக்தி பூர்வமாக முழங்குவர். அந்த வெற்றிவேல் **"சிவயநம"** எனும் ஐந்தெழுத்து வடிவானது என்று சந்தக்கவி அருணகிரிநாதர் முந்து தமிழில் மொழிந்திருத்தல் நினைந்து நினைந்து மகிழத்தக்கதாகும்.

சிவாயநம என்னும் இப்பஞ்சாட்சரத்தின் பெருமையைக் கூறும் பாடலும் அதற்கு வாரியார் சுவாமிகள் தரும் விளக்கமும் அறியத்தக்கவை.

**செய செய அருணாத்திரி சிவ யநமச்**
**செய செய அருணாத்திரி மசிவ யநச்**
**செய செய அருணாத்திரி நமசி வயத்**
**செய செய அருணாத்திரி யநம சிவச்**
**செய செய அருணாத்திரி வயந மசிவ்**
**செய செய அருணாத்திரி சிவயநமஸ்த்து என**

**திருமூலா**

எனவரும் திருப்புகழ்த் தொடர்களில் திருவைந்தெழுத்தின் எழுத்துக்களை மாற்றியமைத்து உச்சரிக்கும் முறைகள் பற்றி அருணகிரிநாதர் கூறுவர். இதற்கு வாரியார் சுவாமிகள் விரிவான விளக்கம் எழுதுகிறார்.

இந்தத் திருப்புகழ் மிகவும் அருமையானது. பாராயணம் செய்தற்குரியது. இதனை நாடோறும் புரிவோர் வினைகள் விலகப் பெறுவர். திருவருளை எளிதில் அடைவார்கள்.

இதில் பஞ்சாக்கரமும் நினைக்க முக்தியளிக்கும் அருணாத்திரி என்ற திருநாமமும் பலமுறை வருகின்றன. சிவயநம என்ற பஞ்சாட்சரம் எழுத்துக்கள் மாறி மாறி வருகின்றது.

இப்படி உச்சரிப்பதனால் அதிக பயன் உண்டு என்று திருமூலர் கூறுகின்றார் என இப்பாடலின் சிறப்பினைத் திருமந்திரப் பாடல்களுடன் வாரியார் சுவாமிகள் விளக்குகின்றார்.

பஞ்சாட்சரத்தில் நகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது வேதமுறை. சிகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது ஆகம முறை. இதுவே நமச்சிவாய சிவாய நம என்னும் இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடு.

**அறிவு வாள் :**

தன்னை உணர்தல் என்பது இறைநெறியில் ஒரு குறிப்பிடத்தக்க நிலை. இந்நிலையை அடைந்தவர் நெல்லிற்கு உமிபோலத் தம்முடன் பிரிப்பற்று நிற்கும் ஆணவத்தை அகற்றி இறையருள் பெற்றுச் சிறப்பர். இவ்வாணவ இருளை அறுக்கும் அறிவு வாளாகத் திருப்புகழ் விளங்குகின்றது. என்னால் பிறக்கவும் எனத் தொடங்கும் பாடலுக்கு முன்னுரையில் வாரியார் சுவாமிகள் எழுதியுள்ள விளக்கம், திருப்புகழின் இத்திறத்தினை விளக்குகின்றது.

இத்திருப்புகழ் மிகவும் உயர்ந்த பாடல். நம்மை உய்விக்கும் பெற்றியுடையது. முதல் நான்கு அடிகள் எல்லாம் ஈசன் செயல் நமது செயல் ஒன்றுமில்லை என்று பரம குருநாதராகிய அருணகிரிநாதர் உபதேசிக்கின்றார்.

நான் செய்கின்றேன். நான் நடத்துகின்றேன், நான் அனுபவிக்கின்றேன். இந்தக் குடும்ப உயர்ச்சிக்கு நான் காரணம் என்று எண்ணுவதும், கூறுவதும் முழு அறியாமையாகும். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பது ஆப்த வாக்கியம். பாவைக் கூத்திலே பொம்மைகளைச் சூத்திரதாரி கயிறு கொண்டு ஆட்டுவது போல் மாமிசப் பொம்மைகளாகிய நம்மை இறைவன் ஆட்டுகின்றான். நாம் ஆடுகின்றோம் என எழுதியுள்ளார்.

அருள்மொழி அரசு வாரியார் சுவாமிகளைத் தவிர வேறு யார் இப்படி எழுத முடியும்?

# புதுவையில் திருவாசகம்

பல்துறை வித்தகர்.
டாக்டர். **ந. ராமசுப்ரமணியன்,** சென்னை

"தொல்லை இரும்பிறவிச் சூழும் தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே - எல்லை
மறுவா நெறியளிக்கும் வாதவூர் எம்கோன்
திருவாசகம் என்னும் தேன்"

"**திருவாசகம்**" எனும் பிறவிப்பிணி அறுக்கும் தோத்திர நூலைப் பருகினால் அது தேன் கலந்தும், பால் கலந்தும், தித்திக்கும் சுவை கலந்தும், ஊன் கலந்தும், உயிர் கலந்தும் உவட்டாமல் இனிக்கும் அல்லவா!

நரியைப் பரியாக்கி, பரியை நரியாக்கி திருவிளையாடல் நடத்திய மதுரை சொக்கநாதப் பெருமான், "திருவாதவூரர் ஞானமார்க்கத்தில் எமை அடைய வந்தவர்" என மதுரையை ஆண்ட அரிமர்த்தன பாண்டியன் எனும் வரகுண பாண்டியனுக்குப் புரிய வைத்தான்.

இதற்கு முன்பு, வரகுணன் குதிரைப் படைகளை தருவிக்கத் தந்த பொருட்களைக் கொண்டு வரகுண பாண்டியனின் முதலமைச்சராய் இருந்த வாதவூரர், திருப்பெருந்துறை எனும் ஆவுடையார் கோயிலில் குருந்த மரத்தடியிலே குருபரனாய் அமர்ந்திருந்து சிவபெருமானைக் கண்டு வணங்க குருபரன் நயன, ஸ்பரிஸ, வாசக தீட்சை தந்தருள, "**நமச்சிவாய வாழ்க**" எனும் சிவபுராணப் பாடலால் அர்ச்சித்து, இணையார் திருவடியில் வீழ்ந்து, வணங்கி, கொண்டு வந்த பொருட்செல்வத்தைக் கொண்டு ஒரு திருக்கோயிலை நிர்மாணம் செய்திட்டார். அதன் பிறகு நடந்ததே நரியைப் பரியாகவும், பரியை நரியாகவும் ஆக்கிய திருவிளையாடல்.

**திருவாசகம் கிடைத்த வரலாறு :**

அதன் பிறகு, முதலமைச்சர் பதவியை உதறித் தள்ளி, ஆண்டியின் கோலத்துடன் சிவபெருமான் எழுந்தருளும் பல திருத்தலங்களுக்குச் சென்று, ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கும் திருவாசகப் பாடல்களால் அர்ச்சித்து வந்தார்.

இறுதியில் பூலோக கைலாயமான தில்லைவனம் எனும் சிதம்பரத் தலத்திற்கு வந்து அம்பலவாணனை தரிசித்து, பாமாலை சூட்டினார்.

சிதம்பரத்தில் திருப்பாற்கடல் மடத்தின்கண் தங்கியிருக்கும் நாளிலே, ஒருநாள் நடராஜப் பெருமானே ஒரு வயதான வேதியர் வடிவம் தாங்கி, வாதவூரர் முன்பு தோன்றி "உனது பாடல்கள் அனைத்தையும் தொகுத்துக் கூறுவாயாக" எனப் பணித்தார். அதுகேட்டு திருவாதவூரரே அனைத்துப் பாடல்களையும் கூற, வேதியரும் தனது திருக்கரத்தால் அப்பாடல்களை எழுதி, "வாதவூரன் சொல்ல அழகிய சிற்றம்பல முடையான்" என்று குறித்து கைச்சாத்துமிட்டு, " மாணிக்கவாசக! பாவை பாடிய வாயால் ஒரு கோவையும் பாடுக!" எனவும் பணித்தான். அது கேட்டு உள்ளம் உருகி, "**திருக்கோவையார்**" பாடல்களையும் பாடினார்.

**மாணிக்கவாசகர் சொல்ல அம்பலவாணன் திருவாசகம் எழுதுதல்**

அம்பலவாணன், தனது கையால் எழுதிய திருவாசகத்தை சிற்றம்பலத்தின் முன் உள்ள பஞ்சாட்சரப்படியின் மீது வைத்து மறைந்தருளினார். மறுநாள் தில்லைவாழந்தணர்கள் சிற்றம்பலத்தின் திருக்கடைக்காப்பு நீக்கியபோது, பஞ்சாட்சரப் படியின் மீதிருந்த திருவாசக ஏட்டையும், இறைவனின் கையெழுத்து அதன்மீது இருப்பதையும் கண்டு திகைத்துப் போய் "நடப்பது என்ன?" என்று பொன்னம்பலவாணனிடம் பணிந்து விண்ணப்பிக்க, இறைவன் "திருப்பாற்கடல் மடம் (இது சிதம்பரத்தில் தில்லையம்மன் கோயில் செல்லும் வழியில் உள்ளது) சென்று மாணிக்கவாசகரிடம் வினவவும்" என அசரீரியாகச் சொன்னான்.

இறைவன் பணித்த வண்ணம் திருப்பாற்கடல் மடத்திற்குச் சென்று மாணிக்கவாசகப் பெருமானை வணங்கி, "இந்நூலின் பொருள் யாது" என தில்லை வாழந்தணர்கள் வினவினார்கள்.

சிவனடியார்கள் புடைசூழ தில்லைக் கோயில் சென்று கொண்டிருந்த மாணிக்கவாசகர், அடியார் கூட்டத்திலுள்ள ஒருவரை உற்று நோக்கிப் புரிந்து கொண்டார். "அம்பாலவாணன் அடியவராய் வருகின்றார்" என்று. அவரை நோக்கி, "இந்நூலிற்குப் பொருள் நடராஜப் பெருமானே" என்று காட்ட, அந்த அடியார் மறைந்தார்.

அனைவரும் காண அடியார்கள் கைதொழ, மாணிக்கவாசகர் சிற்றம்பலவாணன் சோதியில் கலந்தருளினார். இது நிகழ்ந்தது ஆனிமாத மகம் நட்சத்திரத்துடன் கூடிய நன்னாளாகும்.

இதுவரை எழுதிய விஷயங்கள் சிவனடியார்கள் அனைவரும் நன்கு அறிந்தவை தான்.

இதில் சிறப்பு என்னவெனில் இந்நிகழ்ச்சியை உறுதிப்படுத்தும் வகையில் திருப்பாற்கடல் மடத்தில் மாணிக்கவாசகர் தனது கைகளால் அடியவருள் ஒருவராக வந்த அம்பலவாணனைக் காட்டும் சிலையும், அடியவர் வேடமிட்ட அம்பலவாணன் சிலையும் உள்ளது தான்.

**திருவாசகம் யாரிடம் சென்றது?**

ஈடு இணையற்ற தெய்வத் தமிழ் வேதமாகிய திருவாசக ஏடுகளை உரிமை கொண்டாடுவதில் தில்லைவாழந்தணர்கள், மடாதிபதிகள், அடியவர்கள், அரசன் ஆகியோரிடம் சர்ச்சை ஏற்பட்டது. இதற்கு நடராஜப் பெருமானே வழிகாட்ட வேண்டும் என அனைவரும் வேண்ட, "இத்திருவாசக ஏடுகளை சிவகங்கையில் விட்டிடுக, அது மிதந்து யார் பக்கம் வந்து சேருகின்றதோ அவரே அதைப் பெறத் தகுதியுடையவர்" என்று அசரீரி மூலம் ஆணையிட்டான ஆடவல்லான்.

ஆண்டவன் கட்டளைக்கிணங்க, வெள்ளித்தட்டில் ஒரு திருநீற்றுப்பை, ருத்ராட்சம் மற்றும் திருவாசக ஏடுகளை சிவகங்கையில் விடுவித்து, சிவகங்கையின் நாற்புறமும் தில்லைவாழந்தணர்கள், அரசன், சிவனடியார்கள், மடாதிபதிகள் என அனைவரும் பக்தியுடன் கரம் கூப்பி நின்றனர்.

வெள்ளித்தட்டு சிவகங்கையில் மிதந்து, மெதுவாகப் பலரையும் கடந்து, தெய்வீகப் பொலிவுடன் நின்று கொண்டிருந்த சிவனடியார் ஒருவர் முன் வந்து நின்றது. அவர் வேறு யாருமல்லர்! அம்பலவாணரே மனித உருவில் வந்தவராவார்! அவரைக் கண்டு ஆச்சரியமடைந்த அனைவரும் அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கி நின்றபோது, "எமது கலாரூபமாகத் திகழும் இச்சங்கமரே இந்நூலுக்குரியவராய் அம்பலத்தாடுவார் எனும் திருநாமம் பூண்டு வழிவழியாய் பூசித்து, சைவத்தைப் பரப்பி வருவதுடன், எம்முடியில் யாம் ஏற்கும் அபிடேகாதி உபசாரங்களை அவரது திருவடிகளுக்கு அளிப்பீராக" என மற்றோர் அசரீரி எழுந்தது.

அச்சங்கமரால் நிறுவப்பெற்றதே இன்றுவரை விளங்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீலஸ்ரீ பாத பூஜை அம்பலத்தாடும் மடமாகும். இம்மடம் சிதம்பரத்தில் வடக்கு வீதியிலிருந்து தில்லையம்மன் கோயிலுக்குச் செல்லும் பாதையில் அம்பலத்தாடுவான் மடத்தெரு என்ற தெருவில் அமைந்துள்ளது.

## பாண்டியன் திருப்பணி :

திருவாசகம் கிடைத்த கதையைக் கேள்வியுற்று அகமகிழ்ந்த அரிமர்த்தன பாண்டியன் எனும் வரகுண பாண்டியன் மதுரையிலிருந்து தில்லைக்கு வந்து ஆதி குருநாதராகிய அம்பலத்தாடுவாரை வணங்கி, மாணிக்கவாசகப் பெருமானின் அழகிய உற்சவ மூர்த்தியொன்றையும் அளித்து, நித்தியபூஜை, விழாக்கள் நடைபெற ஏற்பாடுகள் செய்திட்டான். மேலும் மாணிக்கவாசகரால் நிர்மாணிக்கப்பட்ட திருப்பெருந்துறை ஆத்மநாத சுவாமி ஆலய நிர்வாகத்தையும் இம்மடாதிபதிகளிடம் ஒப்படைத்து, ஆசி பெற்று, மகிழ்ச்சியுடன் மதுரை திரும்பினான்.

பாதபூஜை அம்பலத்தாடுவார் தமது சீடர்களில் ஒருவருக்கு தமது பாதுகையையும் திருவாசகப் பெட்டகத்தையும் அளித்து, அப்பீடத்திற்குரிய அதிகாரத்தையும் அளித்து சிவபோக சமாதி கூட ஜீவைக்கியம் ஆனார்.

## சிதம்பரத்தில் மட நிர்மாணம் :

பிற்காலத்தில் இம்மடாதிபதி ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமிகள் காசி யாத்திரை செல்லும்போது திருப்பெருந்துறை ஆலய நிர்வாகத்தை திருவாவடுதுறை ஆதீனகர்த்தாவிடம் ஒப்படைத்துச் சென்றார்.

இப்படி ஸ்ரீலஸ்ரீ பாதபூஜை அம்பலத்தாடும் சுவாமிகள் மடத்தில் மாணிக்கவாசகர் சொல்ல அம்பலத்தாடுவான் கைப்பட எழுதப்பட்ட திருவாசகம் ஒரு வெள்ளிப் பேழையில் பூஜையில் வைக்கப்பட்டிருந்தது.

இம்மடத்தின் விரிவாக்கமாக சுத்துக்கட்டு மண்டபம், பிரகாரம், தோட்டச் சுவர் ஆகிய திருப்பணிகளை ஏழாம் பட்டத்து சுவாமிகள் செய்திட்டார்.

## மடத்திற்கு ஆபத்தும், புதுவையில் மடமும் :

இந்த பாதபூஜை அம்பலத்தாடும் திருமடம் வளர்ந்து, ஸ்ரீசைலம், திருவேந்திபுரம், ஏகம்பலம் (ஏம்பலாம்), பட்டை (அரிகோஷ்டி), களக்காடு, காரைக்கால், டி.ஆர்.பட்டினம், வாழுமங்களம், திருமருகல், மயிலாடுதுறை என மற்றும் பல ஊர்களிலும் விரிவடைந்தது.

ஆனால் கர்நாடக யுத்தத்தின் போது, முஸ்லீம் நவாபின் படையெடுப்பால் மடத்தின் பெரும்பகுதி சிதைக்கப்பட்டது. மதமாற்றம் பெருமளவு நடைபெற்றது. இதன் காரணமாக அப்போதைய பத்தாவது மடாதிபதிகளாயிருந்தஸ்ரீ நாகலிங்க சுவாமிகள் உயிரினும் பெரிதாய்ப் போற்றிய பேழையையும், மாணிக்கவாசகர் மூர்த்தத்தையும் இறைவனே சுட்டிக்காட்டியபடி புதுச்சேரிக்கு எடுத்துச் சென்றார். இறைவன் கருணையை நினைத்து திருவாசகம் வைக்கப்பட்ட வெள்ளிப் பெட்டகத்தை பட்டுத் துணியால் மூடி, சிரத்திலே சுமந்து, தொண்டர்கள் இருவரை அழைத்துக் கொண்டு புதுவைக்குப் புறப்பட்டார். புயலினின்றும் தப்பித்து கடலூர் வழியாக புதுவை வந்து சேர்ந்தார். அங்கிருந்த சீடர்களின் ஆதரவாலும், துணையாலும் திருமடம் ஒன்று அமைத்து, அதுமுதல் மடாதிபதிகள் அவ்விடமே தங்கி வழிபாடும், சமயப்பணிகளும் செய்து வந்தார்.

ஆக உலகம் உய்ய இறைவன் அருளிய திருவாசகத்தை போற்றிப் பாதுகாத்து, புதுவைக்குக் கொண்டு வந்த பெருமை ஸ்ரீ நாகலிங்க சுவாமிகளையே சாரும். அவர் தங்கியிருந்த இடமே "**அம்பலத்தாடும் சுவாமிகள் மடம்**" எனப் பெயர் பெற்றது. இங்கு அவருடைய சமாதியும், அதன்மேல் சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்யப்பட்டுள்ளது.

இப்படி, திருவாசக ஏடுகள் தில்லையிலிருந்து புதுச்சேரிக்கு வந்தன. புதுச்சேரியில் அம்பலத்தடியார் கோயில் தெருவில் ஸ்ரீலஸ்ரீ பாதபூஜை அம்பலத்தாடும் சுவாமிகள் மடம் இவ்வாறாகத் தொடங்கப்பட்டது. இம்மடத்தில் நடராஜமூர்த்திக்கும், குருமூர்த்தங்களுக்கும், வெள்ளிப் பேழையிலுள்ள திருவாசக ஏடுகளுக்கும் நித்திய பூஜை நடைபெறுகிறது. ஆனி மாத உற்சவமும். மார்கழி திருவாதிரை உற்சவமும் நடைபெறுகின்றன.

**சிதம்பர மடம் :**

சிதம்பரத்தில் முதலாவதாகத் தோற்றுவிக்கப்பட்ட பாதபூஜை அம்பலத்தாடும் மடத்தில் தற்போதும் முறையாக சிவலிங்க பூஜை நடைபெற்று வருகின்றது. இங்கு குருந்த மரம் உள்ளது. அதனடியில் மாணிக்கவாசகப் பெருமானுக்கு ஆண்டுதோறும் திருவிழாவும் நடைபெற்று வருவது சிறப்பு அம்சமாகும். ஆனால் இம்மடம் தற்போது சிதிலமடைந்த நிலையிலுள்ளது வருந்தத்தக்கது.

இம்மடத்தின் நிர்வாகத்தின் கீழ், நடராஜர் கோயில் வடக்கு சந்நிதிக்கு நேராக அமைந்துள்ள திருப்பணி விநாயகர் ஆலயம் சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றது. இந்த திருப்பணி விநாயகர் ஆலயத்தின் சிறப்பு மிகவும் உயர்வானது. நடராஜப் பெருமான் திருக்கோயிலை நிர்மாணம் செய்யத் திருப்பணி தொடங்கும் முன் இரண்யவர்மன் எனும் அரசன், இந்த விநாயகர் கோயிலை நிர்மாணித்ததாக வரலாறு உண்டு. இவ்விநாயகர் திருமூர்த்தியின் தலையில் சிவலிங்கம் உள்ளது. இச்சிலைக்குப் பின்புறச் சுவற்றில் சிவகாமசுந்தரி நடராஜப் பெருமான் சிலை புடைப்புச் சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. பேரரசனாக இருப்பினும் இச்சிறிய கோயிலை ஸ்தாபித்து, இவ்விடத்திலேயே தங்கி இரண்யவர்மன் தில்லை கோயிலை அமைத்திட்டான் என்ற சிறப்பான வரலாறு உண்டு.

**புதுவையில் பூஜை :**

இந்த வகையில் தேனினும் இனிய ஞான நூலாகிய திருவாசகம் தற்போது புதுச்சேரி அம்பலத்தாடுமையர் வீதியில் அமைந்துள்ள ஸ்ரீ பாதபூஜை அம்பலத்தாடும் மடத்தில் வைக்கப்பட்டு நித்திய பூஜை நடைபெறுகின்றது என்பது ஒரு சிறப்புமிக்க சரித்திரமாகும்.

புதுச்சேரி மடத்தில் சிவராத்திரி அன்று இரவு 12.00 மணிக்கு இரண்டாம் கால பூஜையில் ஒவ்வொரு ஆண்டும் இப்புனிதமான திருவாசக நூல் பொது மக்கள் தரிசனத்திற்காக வைக்கப்பட்டு வழிபாடு நடைபெறுகின்றது.

இதற்கான சரித்திரக் குறியீடுகள் பிரசித்தி பெற்ற புதுச்சேரி ஆனந்தரங்கம் நாட்குறிப்பிலும் உள்ளன என்பது சிறப்பான செய்தியாகும்.

மனிதனால் இறைவனுக்குச் சொல்லப்பட்டு, இறைவன் திருக்கரத்தாலேயே எழுதப்பட்ட, தமிழ் வேதங்களில் முதன்மையான வேதமாகிய திருவாசக ஏடுகள் இன்றும் பத்திரமாக புதுச்சேரியில் உள்ளன என்பது சைவ சமயத்தினர் அனைவருக்கும் எல்லையில்லா இன்பத்தினை அளிக்கின்றது.

---

## வினா - விடை

**கேள்வி : "குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம்" எனச் சொல்கிறார்களே. திருச்செந்தூரில் குன்று எங்கே உள்ளது? கடல்தானே உள்ளது?**

**பதில் :** திருச்செந்தூர் சந்தன மலை, சந்தனாசலம் என்று அதற்குப் பெயர். திருச்செந்தூர்க்கோவில் மூலஸ்தானம் குடவரை, மலையைக் குடைந்து செய்தது.

**கேள்வி : முருகனைப் பிரார்த்தனை செய்யும்போது எந்த மந்திரத்தைச் சொல்லிப் பிரார்த்திப்பது?**

**பதில் :** முருகனை வழிபடுவோர் **"ஓம் சரவணபவ"** என்னும் சடக்ர மந்திரம் செபிக்க வேண்டும்.

"மத்திதந் தநுதினம் முழுப்பயன் நல்கிடச் சத்தியமாவது சரவண பவவே" என்கின்றார் பாம்பனடிகள்.

**- திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்**

## உனது அடியாராகிய மோன ஞானிகளுடனே சேரவும் அருள்வாயே

- சிவத்தமிழ்ச் செல்வர்,
புலவர், வ. **ஞானப்பிரகாசம்** M.A., B.Ed.
கடலூர்

கி.பி.15 ஆம் நூற்றாண்டில் (1401 - 1500) முற்பகுதியில் திருவண்ணாமலையில் தோன்றியவர் அருணகிரிநாதர். நற்குடியில் பிறந்த அவர் ஊழ்வினையின் காரணமாக தீயநெறியில் செல்லத் தொடங்கினார். இறுதியில் பெரும் பிணியுற்று வருந்தினார். உலக வாழ்க்கையை வெறுத்துத் திருவண்ணாமலைக் கோயில் கோபுரத்தில் ஏறி விழுந்து உயிர்விடத் துணிந்தார். அப்போது முருகப் பெருமான் அங்கு எழுந்தருளி அவரைக் கீழே விழாமல் தாங்கியருளினார். உடன் அவர் நோய் நீங்கி நலம் பெற்றார்.

திருமுருகன் "**முத்து**" என அடியெடுத்துத் தந்து தம்புகழைப் பாடுமாறு பணித்தருளினார். அங்ஙனமே அவர் பாடத் தொடங்கினார் " **பாடும் பணியே பணியா அருள்வாய்**" என அவர் கந்தர் அநுபூதியில் வேண்டிக் கொள்வது போல முழு நேரப் பணியாகத் தலயாத்திரை செய்து, எல்லா முருகத் தலங்களையும், சிவத்தலங்களிலுள்ள திருமுருகர் சந்நிதிகளையும் வழிபட்டுப் பாடலானார். அங்ஙனம் அவர் பாடிய திருப்புகழ்ப் பாக்கள் 16,000 என்பர். ஆனால் இன்று நமக்கு கிடைத்துள்ளவை 1325 பாடல்களே.

202 திருத்தலங்களுக்குரிய பாடல்கள் கிடைத்துள்ளன. வைப்புத் தலங்களாக 99 தெரிய வருகின்றன. அப்படி அவர் பாடிய தலங்களுள் சிதம்பரமும் ஒன்று. சிதம்பரத்திற்குரியதாக 68 திருப்புகழ் கிடைத்துள்ளன. அவற்றுள் 36 ஆவது திருப்புகழாகிய "**தாது மாமலர்**" என்ற திருப்புகழை இங்கு சிந்திப்போம்.

**"தாது மாமலர்"** என்னும் இத்திருப்புகழே திருப்புகழ் ஆகிய சந்தத் தமிழ் நமக்குக் கிடைப்பதற்குக் காரணமாக அமைந்தது.

சிதம்பரம் மேலைக் கோபுர வாயில் குமரக்கோட்டத்தில் எழுந்தருள்புரிகின்ற குமரப் பெருமானை தீக்ஷிதர் பெருமகனார் ஒருவர் சந்தமிகு செந்தமிழால் பாடிப் பரவினார். இதனை மெய்ம் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார் வடக்குப்பட்டு திரு.த.சுப்பிரமணிய பிள்ளை அவர்கள். "**தாது மாமலர் முடியாலே**" என்ற இந்தத் திருப்புகழ்ப் பாடல் அவரை ஈர்த்தது. அவர் சிதம்பரம் தீக்ஷிதர் அவர்களிடம் இப்பாடலையும், பிற திருப்புகழ்ப் பாடல்களையும் கேட்டுப் பெற்றார். பிற தலங்களுக்குரிய திருப்புகழ்ப் பாடல்களையும் தேடித் தொகுத்து அச்சேற்றி வெளியிட்டார்.

திரு.வ.த. சுப்பிரமணிய பிள்ளை 1894-இல் திருப்புகழைப் பதிப்பித்தபோது கையெழுத்துப் படிகளிலிருந்து பாடல்களை ஆய்வு செய்து அச்சேறுவதற்குச் செப்பனிட்டுக் கொடுத்தவர் திருப்பாதிரிப்புலியூர் மகாவித்வான் இயற்றமிழாசிரியர் திரு.கா.ரா.சிவ சிதம்பர முதலியார் ஆவார். திருப்புகழை ஓதுகின்ற அடியார்கள் இவ்விரு சான்றோர்களுக்கும் நன்றி செலுத்தும் கடப்பாடு உடையவர்களாக இருக்க வேண்டும். திருப்புகழ் பொதுவாகப் பின்பாதியை முன்னாகவும், முன்பாதியைப் பின்னாகவும் வைத்துப் பொருள் கொள்ளுமாறு அமையும்.

சிதம்பரம் பாடல் பெற்ற 276 தலங்களுள் ஒன்றாக அமைந்த சிவத்தலம். சைவத்தின் முதன்மைத் தலம் மட்டுமன்று, ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற 108 வைணவத் திருப்பதிகளுள் ஒன்றும் ஆகும். திருச்சிற்றம்பலத்தில் நடராசரும், திருச்சித்ர கூடத்தில் கோவிந்தராசரும் அருகருகே எழுந்தருளியுள்ளனர்.

அருணகிரிநாதர் **"திருமால் நாரணன் மருகோனே"** என முதலில் முருகனைப் போற்றுகிறார். கஜேந்திரனாகிய யானை முதலை வாயில் அகப்பட்டபோது, **"ஆதிமூலமே"** என அழைத்து ஓலமிட அப்போதே திருமால் எழுந்தருளி முதலையைக் கொன்று யானையைக் காத்தார். இதனைக் **"காதலாய் அருள்புரிவாய் நான் மறைமூலமே என உடனே மாகரி காண நேர்வரு திருமால்"** எனக் குறிப்பிடுகிறார். (காதலாய் - அன்பாய், மா - பெரிய, கரி - யானை, கரத்தையுடையது கரி).

அடுத்து, சிவகாம நாயகி பெற்றெடுத்த திருமகனே! என முருகனைப் போற்றுகிறார். சிவகாமி சிற்சபையில் எழுந்தருளியுள்ள நாதனார் நடராசரின் இடமாக விளங்குபவள். அச்சிற்சபையைப் பொற்சபையைப் பெருந்தவசிகள் அன்போடு வலம் வருகிறார்கள். **"காதல் மாதவர் வலமே சூழ்சபை நாதனார் தமது இடமே வாழ் சிவகாம நாயகி தருபாலா!"** என்பது அருணகிரியார் போற்றுதல். முருகன் - புலிசையின் - புலியூரின் - பெரும்பற்றப் புலியூரின் வாழ்வாக விளங்குகின்றான். **"புலிசையில் வாழ்வே"** என்பது அருணகிரியாரின் போற்றுதல். தில்லை வாழந்தணர்கள் மூவாயிரவர் நாளும் வேள்வி செய்து நடராசரையும் திருமுருகனையும் பூசிக்கின்றார்கள். **"வேத நூன்முறை வழுவாமே தினம் வேள்வியால் எழில்புனை மூவாயிர மேன்மை வேதியர் மிகவே பூசனை கோவே"** என்பது அருணகிரியார் போற்றுதல் (வழுவாமே - தவறாமல், எழில் - அழகு, கோ - அரசன்).

**"கற்றாங்கு எரியோம்பி கலியை வாராதே**
**செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம் (1.80.1)**

என்பது திருஞானசம்பந்தர் திருமொழி.

**"வேதியர்க்கு அழகு வேதமும் ஒழுக்கமும்"** என்பது வெற்றி வேற்கை. வேதமும் ஒழுக்கமும் வாய்ந்த மாட்சிமைமிக்க தீக்ஷிதர்கள்.

மேலைக் கோபுர வாயிலில் எழுந்தருளியுள்ள செல்வ முத்துக்குமரனைப் போற்றிப் பரவுகின்றனர் என்பது அருணகிரியார் வாக்கு. கந்தசஷ்டியின்போது சூரசம்ஹாரம் செய்யும் சூரசம்ஹார மூர்த்தி இவரே. மேலைக் கோபுரம் மேருமலை போல உயர்ந்து விளங்குகிறது. மேருமலை பெருமை பொருந்திய மலைகட்கு அரசாக விளங்குகிறது. **"வீறு சேர்வரை அரசாய் மேவிய மேருமால் வரை என நீள் கோபுர மேலை வாயிலின்(ல்) மயில் மீது ஏறிய பெருமாளே"** என்பது அருணகிரியார் போற்றுதல் (வீறு - பெருமை, வரை - மலை, மேவிய - அமைந்த, மால் வரை - பெரிய மலை).

அடுத்து முன்பகுதிப் பாடலைச் சிந்திக்க வேண்டும். அருணகிரியார் இளமையில் பெண் இன்பத்தில் மூழ்கித் தம் வாழ்வைச் சீரழித்துக் கொண்டதை நினைவு கூர்கிறார். பெண் இன்பம் வாழ்வின் ஒரு கூறே தவிர பெண் இன்பமே வாழ்க்கை அன்று. குலமகளிர் பல்வேறு குடும்பக் கடமைகளை ஆற்றுவதோடு, இன்பத்தையும் தருவார்கள். விலை மகளிரோ இன்பம் தருவதையே தொழிலாகக் கொண்டவர்கள். மருவுதலையே தொழிலாகக் கொண்ட பெண்களின் மீது ஆசையை மறக்க வேண்டும் என்பதையே **"மருவு பெண் ஆசையை மறக்கவே வேண்டும்"** என வள்ளற் பெருமான் வேண்டினார். அத்தகைய விலை மகளிர் இன்பத்தில் மூழ்கிக் கிடத்தலையே அருணகிரியார் இங்கு வெறுத்துரைக்கிறார். அவர்களின் உடல் அசைவு, அலங்காரம், உடற்கவர்ச்சி, பேச்சு இவற்றையெல்லாம் விரிவாகப் பேசுகிறார்.

"தாது மாமலர் முடியாலே, பதறாத நூபுர அடியாலே, கரதாளமாகிய நொடியாலே, மடி பிடியாலே, சாடை பேசிய வகையாலே, மிகுவாடை பூசிய நகையாலே, பல தாறுமாறு சொல் மிகையாலே, அன நடையாலே, மோதி மீறிய முலையாலே, முலை மீதில் ஏறிய கலையாலே, வெகு மோடி நாணய விலையாலே, மயல் தரும் மானார் மோகவாரிதி தனிலே நாள்தொறும் மூழ்குவேன்" என்பது அவர் வாக்குமூலம். (தாது – மகரந்தம், நூபுரம் – சிலம்பு, மடி பிடி – பணம் வைத்துள்ள மடியைப் பிடித்து இழுத்தல், வாடை – வாசனை, வாசனைப் பொருள்களை உடம்பில் நிரம்பப் பூசியிருத்தல், நகை – புன்னகை, சொல் மிகை – அதிகமான பேச்சு, அனநடை – அன்னப் பறவை போன்ற நடை, கலை – ஆடை, மயல் – மயக்கம், மானார் – மான் போன்றவர், மோக வாரிதி – மோகக் கடல்)

அப்படிப் பெண்களின் மோகக்கடலில் மூழ்கிக் கிடக்கும் என்னை கரையேற்றி மடை மாற்றம் செய்து, திருப்பி **"உனது அடியாராகிய மோனஞானிகளுடனே சேரவும் அருள்வாயே"** என முருகப் பெருமானை வேண்டுகிறார். **"மோனம் என்பது ஞானத்தின் வரம்பு"** என்பது ஔவையின் மொழி. அடியார்களுடன் சேர்ந்தால் நம் தீயகுணங்கள் நீங்கிவிடும். அவர்களிடம் உள்ள நல்ல குணங்கள், நல்ல செயல்கள், நல்ல ஞானம் நமக்கும் சேர்ந்துவிடும். அதனால் நாம் இறைவனைச் சேரலாம். **"அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்"** (8.21.1) என மாணிக்கவாசகரும் வேண்டினார். **"பெரிய தொண்டரோடு கூட்டு கண்டாய்"** என அபிராமிபட்டரும் வேண்டினார். அவர்களோடு சேர்ந்து நாமும் வேண்டுவோம்.



போற்றுகின்றன. அதேபோல் பண்டைய தமிழ் இலக்கியங்களும் தீப வழிபாட்டினை போற்றுகின்றன. தமிழ்த் திருமுறைகள் அனைத்தும் ஒரே ஒரு கருத்தை அடிக்கடி சொல்கின்றன. அது இறைவன் ஜோதி வடிவானவன் (சொற்றுணை வேதியன் சோதி வடிவானவன், அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்) வைணவ பிரபந்தங்களும் தீப வழிபாட்டைப் போற்றுகின்றன. (வையந்தகளியா வார்கடலே நெய்யாக). அனைத்து தேவர்களும், ரிஷிகளும், உயிரினங்களும் தீப வடிவில் (ஷோடச உபசார தீபங்கள்) வழிபாடு செய்வதாகக் கருதி தான் தெய்வங்களுக்கான தீப ஆராதனை நடக்கின்றது. அக்னி வழிபாட்டில் மிக எளிமையானதும், பெரும் புண்ணியம் தருவதும் தீப வழிபாடு. ஆகவே தான் ஆலயங்களில் தீபம் ஏற்றுவது பெரும் புண்ணியத்தினையும், முக்தியையும் நல்குவதாக புராணங்கள் பகர்கின்றன. பிரம்மாவும், விஷ்ணுவும் அடிமுடி காண முடியாத ஒரு பெரும் சோதியைத் தேடியதாகவும், சிவபெருமான் - தானே அந்த ஜோதி என்று பிரம்ம விஷ்ணுக்களுக்கு காட்சி அளித்ததாகவும் லிங்க புராணம் கூறுகின்றது. சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய அக்னியில் இருந்து தான் முருகப் பெருமான் தோன்றியதாக புராணங்கள் பகரும். தீப வழிபாடு பற்றி சங்க இலக்கியங்களிலிருந்து திருஞானசம்பந்தர் தேவாரம் வரை பல குறிப்புகள் கிடைக்கின்றன. "**மைம்மிசை யின்றி மலைவிளக்குப் போலோங்கிசெம்மையி னின்றிலங்குந் தீபிகை - தெம்முனையுள்**" என்று தொல்காப்பியம் புறத்திணையும், "**வானம் ஊர்ந்த வளங்கொளி மண்டிலம்நெருப்பெனச் சிவந்த உருப்பு அவிர் அம்கட்டு**" என்னும் ஔவையார் கூற்றும் (அகநானூறு), தேச விளக்கெல்லாம் ஆனாய் நீயே என்று திருமுறையும், கார்த்திகை விளக்கீடு காணாதே போதியோ என்று திருஞானசம்பந்தர் தேவாரமும் தீப வழிபாட்டினைப் போற்றுகின்றன. தீப வழிபாடு தமிழர்களின் வழிபாடு. அது பண்டைய காலத்திலிருந்து தொடர்ந்து வருகின்றது.

கார்த்திகை தீபத்தினை ஏற்றுவதும், காண்பதும் நம் வாழ்வில் ஏற்படும் இருள் எனும் துன்பங்களை நீக்கி, மகிழ்ச்சி எனும் ஒளிவெள்ளத்தை அளிக்கும் என்பது திண்ணம்.

**சொக்கப்பனை :**

திருக்கார்த்திகை தினத்தில் சொக்கப்பனை ஏற்றுவது வழக்கம். சொக்கப்பனை என்பது சொர்க்கப் பனை, சுவர்க்கப் பனை, சொக்கர் (சிவபெருமான்) பனை என்பனவற்றின் திரிபாக அறிஞர்கள் கூறுவார்கள். திரிபுரஸம்ஹாரத்தினையும், அடிமுடி தெரியாவண்ணம் பிரம்ம விஷ்ணுக்களுக்கு காட்சி அளித்ததையும் நினைவூட்டும் விதமாகவும், சொக்கப்பனை ஏற்றப்படுவதாக நம்பப்படுகின்றது. (சொக்கப்பனை) - பனை ஓலை கொண்டு கூம்பு வடிவில் செய்து அதனை ஏற்றுவதால் தெரியும் ஜோதியை தரிசனம் செய்வது பெரும் முக்தியைத் தரும் என்பது ஆன்றோர்கள் வாக்கு. பனை மரம் **கல்பதரு** என்றழைக்கப்படுகிறது, **தேவமரம்** என்றும் அழைக்கப்படுகிறது. பனை மரத்தின் வேர் முதற்கொண்டு நுனி வரை அனைத்துப் பொருட்களும் மனித வாழ்க்கைக்கு உதவுகின்றன. வேறு எந்த மரத்திற்கும் இல்லாத சிறப்பு பனை மரத்திற்கு உண்டு. பனை ஓலை பச்சையாக இருந்தாலும் தீ பட்டவுடன் கொழுந்துவிட்டு எரியும் தன்மை உடையது.

பனை மரத்தினைப் போல வாழ்க்கை முழுவதும் பிறருக்கு உதவியாக இருந்தால், ஸதேக முக்தி அதாவது, இந்த வாழ்க்கையிலேயே சுவர்க்கத்தைக் கண்டு, முக்தியை அடைய முடியும் என்பதைக் காட்டுவதற்காகவே சொர்க்கப் பனை அல்லது சொக்கப்பனை அமைந்துள்ளது. கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரம் அன்று புதுமணமகளைக் கொண்டு புது தீபம் ஏற்றச் சொல்வதும், பால் காய்ச்சச் செய்வதும், மணல் படாத கார் அரிசியைக் கொண்டு செய்யப்படும் அவல் - வெல்ல இனிப்பைச் செய்து நிவேதனம் செய்வதும், தீபங்களை வீடுகளிலும், தெருக்களிலும் ஏற்றச் செய்வதும் பற்றி அகச் செய்யுள்களில் நக்கீரனார் குறிப்பிடுகின்றார். கார்த்திகை தினத்தன்று அவல் பொரி இனிப்பு செய்து நிவேதனம் செய்வது காலங்காலமாக நடந்து வருவதை பழங்காலச் செய்யுள் அறிவிக்கின்றது. தீபம் ஏற்றி சிவபதம் அடைந்தவர்களைப் பெரியபுராணம் (கணம்புல்ல நாயனார்) அற்புதமாக விளக்குகின்றது. தீபம் ஏற்றுவோம் ! தீவினைகள் நீங்கப் பெறுவோம்!!

திருக்கார்த்திகை தீபத் திருநாளில் மேலைக்கோபுர வாசலில் குமரக் கோட்டத்தில் எழுந்தருளி இகபர நலன்களை வாரி வழங்கும் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரப் பெருமான் சன்னதியில் செங்குந்த மரபினர் மிகப் பழங்காலந்தொட்டே சொக்கர் பனையைச் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்யும் உற்சவத்தினை நிகழ்த்தி வருகின்றனர் என்பது குறிக்கத்தக்கது.

ஸ்ரீமந் ஆனந்த நடராஜராஜர் சபைக்கு முன்பு கம்ப விளக்குத் தீபம் ஏற்றும் உற்சவமும் மிகப் பழங்காலம் முதலே செங்குந்த மரபினரின் நாட்டாண்மைத் தலைவர் அவர்கள் உபயமாகச் செய்து வருகின்றனர் என்பதும் இங்கு நினையத்தக்கது.

– பதிப்பாசிரியன்

## நடராஜர் உலா - நமக்குத் தெரியுமா?

அந்நியர் படையெடுப்பின்போது பொன்னம்பலக் கூத்தனையும் சிவகாமி அன்னையையும் பாதுகாத்துப் போற்ற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தில்லை வாழந்தணர்களும், சிதம்பரம் நகர மக்களும், சிவனடியார்களும் தில்லை நடராசரை பாதுகாப்பிற்காகக் கோயிலை விட்டு வெளியே கொண்டு சென்றனர்.

அக்காலச் சூழ்நிலையை ஆராய்ந்து பார்க்கும்போது 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அடிக்கடி பீஜப்பூர் சுல்தானின் படையெடுப்பு நடந்ததால் பாதுகாப்பிற்காக இந்நிகழ்வு நடந்திருக்கலாம் என யூகிக்க முடிகிறது.

சிதம்பரம் நடராசர் 24.12.1648 முதல் 14.11.1686 முடிய 37 ஆண்டுகள் 10 மாதம் 20-நாள்கள் சிதம்பரத்தில் இல்லாமல் பாண்டிய நாடு சென்று 40 மாதங்கள் குடுமியா மலையிலும் பின்னர் மதுரையிலும் இருந்து பின்னர் தில்லை வந்தார் என்றும், சிதம்பரம் சிற்றம்பலமுனி தில்லை வர உதவினார் என்றும் திருவாரூர்ச் செப்பேட்டில் உள்ள பாடல்கள் தெரிவிக்கின்றன.

**விடையில் வந்த செம்பொன் அம்பலத்தான் அந்த**
**வெள்ளியம்பலத்திலேயே விரும்பிச் சென்ற**
**நடையில் வந்த வருடமோ சர்வதாரி**
**நாயப மார்கழி யிருபத்தைந்து நாளாம்**
**கடையில் வந்த வருடங் கார்த்திகை யீரேழு**
**கதிர்வாரம் திரும்பவந்து கலந்தநாளாம்**
**இடையில் வந்த வருடமெண்ணிப் பார்க்கில் முப்பத்**
**தேழுபத்து மாதநாள் இருபதாமே!**

நன்றி!

**- தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## திருவாரூர் - செப்பேட்டுச் செய்திகள்

குடந்தையில் சைவ வேளாளர் குலத்தில் தோன்றிய சிவப்பிரகாசர் அக்காலத்தில் தில்லை நடராசருக்கு ஏற்பட்ட பூசை முட்டுப்பாட்டைத் தவிர்த்தார் என்றும், அதற்கு இலிங்கமநாயக்கர் (கி.பி.1610) என்ற வீரசைவர் உதவினார் என்றும், கி.பி.1648 வரை துறையூர்ப் பாளையக்காரர் ஆதரவில் நடராசர் பாதுகாப்பாக இருந்தார் என்றும் அரசவனத்து அறநிலையம் என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளது.

தில்லையில் 1684, 1686, 1689 ஆகிய ஆண்டுகளில் திருப்பணிகள் பல நடைபெற்றதாக திருவாரூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. மராட்டிய மன்னன் சாம்போசியின் குலகுரு முத்தையா தீட்சிதர் என்பார் பெயரை ஒரு செப்பேட்டில் கும்பாபிடேகம் செய்தவராகக் காணுகிறோம். திருச்சிற்றம்பலத்தவமுனியும் கும்பாபிடேகம் செய்துள்ளார். அவர் சிதம்பரத்தைச் சேர்ந்தவர் என்ற குறிப்புக் காணப்படுகிறது.

இந்தச் செப்பேடுகளில் கோபாலதாதாசி என்ற உயர் அலுவலர் குறிக்கப் பெறுகின்றார். அரசர் பெயர் சாம்போசி எனக் குறிக்கப்பெறுகின்றது. சத்ரபதி சிவாஜியின் மூத்த மகன் சாம்போஜி செஞ்சியை 1680 - 1689 வரை ஆட்சி புரிந்தார். இவருடைய பரங்கிப்பேட்டை சுபேதாரின் பெயர் கோபாலதாதாசி பண்டிதர். இக்காலத்தில் (1684 - 1711) நடராசர் மீண்டும் சிதம்பரம் வந்துசேர சகதி உதவி செய்துள்ளார் எனக் கருதலாம்.

நன்றி!

**- தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## திருவாரூர்ச் செப்பேடு - 5

| | |
|---|---|
| இருக்கும் இடம் | : திருவாரூர்த் தியாகராசர் கோயில் நிருவாக அலுவலகம் |
| அரசன் | : சாம்போசி |
| காலம் | : 1686 |
| மொழி | : வடமொழியும், தமிழும் |
| அளவு | : 19.5 செ.மீ. X 17.5 செ.மீ. |

**அமைப்பும், செய்தியும் :**

மேல் பகுதி அரைவட்ட வடிவமும், கீழ்ப்பகுதி சதுர அமைப்பும் கொண்டது இச்செப்பேடு. முதல் பக்கத்தில் 13 வரிகளும், இரண்டாம் பக்கத்தில் 14 வரிகளும், வடமொழி கிரந்த எழுத்தில் எழுதப்பெற்று இரண்டாம் பக்கத்தின் இறுதியில் அழகிய ஆசிரிய விருத்தமாகிய தமிழ்ப் பாடலைக் கொண்டுள்ளது. மேலே கைப்பிடிப் பகுதியின்றிச் சிறுசூலம் மட்டும் பொறிக்கப்பட்டுள்ளது.

24.12.1648-இல் சிதம்பரத்தை விட்டு வெளியேறிய நடராசர் 40 திங்கள் குடுமியா மலையில் இருந்தார் என்றும், பின் ஏனைய காலம் மதுரையில் இருந்தார் என்றும், இரண்டாம் பக்க இறுதியில் பொறிக்கப்பட்ட தமிழ்ப்பாடல் மூலமாகத் தெரிகிறது.

சாம்போசி மன்னர் 1684-இல் தில்லைத் திருப்பணியைத் தொடங்கினார் என்ற செய்தி முதல் பக்க வடமொழிப் பகுதியால் பெறப்படுகிறது. நடராசப் பெருமான் 'ஊருடைய முதலியார்' என்று இச்செப்பேட்டில் குறிக்கப் பெறுகின்றார். தில்லைக்கு மீண்டும் நடராசர் வந்ததால் 'பாருயிரெலாம் உய்யும்; செம்பொன் மாமழை பெய்யும்; தில்லை மாநகர் வாழும்' என்று குறிக்கப் பெறுகிறது. பொன்னம்பலம் 'சிற்சபை' என அழைக்கப்படுகிறது. இச்செப்பேடுபடி எடுக்கப் பெற்றுள்ளது. (ARE 1946-47 A.No.21)

### செப்பேடு - முதல் பக்கம்

இரத்தாட்சி வருடம் சகாப்பதம் (1606) கோபால பிருத்விசுரபதியினுடைய வேண்டுகோளுக்கிணங்க சாம்போசி புதுப்பித்தலை மேற்கொண்டார். பொன் வேய்ந்தார். செப்பேடு அளித்தார். சிற்சபை மந்திர தந்திரங்களினால் பலன்களைக் கொடுக்கக் கூடியதாக அமையட்டும்.

### இரண்டாம் பக்கம்

உலகில் உள்ள அடியார்கள் அனைவரும் மலைமகளுடன் கூடிய சிவனை மலைமகளின் மேல் எல்லையில்லாத அன்பு கொண்ட சிவனை மந்திரங்களினாலும், தயிர், நெய், பால் முதலிய ஐவகை அமிர்தத்தினாலும், சந்தனம் போன்ற பலவிதமான அபிடேகத் திருமஞ்சன நீரால் மேலான அந்தணர்களால் அபிடேகம் செய்யப்படுபவரும், பலி நைவேத்திய் தூய நீர் ஆகியவைகளால் அபிடேகம் செய்யப்படுபவருமான சபேசனை வணங்குகிறேன்.

முகரப்படாத அருச்சனை மாலைபோல் விளங்குகின்ற பல குணநலன்களையுடைய நல்லறிவு பெற்ற யோகீஸ்வரனால் செப்பேடு செய்யப்பெற்றது. சிற்சபையில் இறைவனுக்காகப் பொன்வேயப்பட்டு அது பலருடைய உதவியால் ஒளிவீசித் திகழ்கிறது.

### தமிழ்பாடல்

மருவியச காத்தமா யிரமும்ஐ நூற்றெழுப
துக்கு மேற் சறுவதாரி
வருஷமார் கழி மாதம் ஆதித்த வாரமதில்
மன்னும் அம் பலவாணரை
அருமையொடு குடுமிமா மலையினாற் பதுமாதம்
அப்புற மதுரைதனிலே
அடவுடன் எழுந்தருள ஆகமுப் பதிமின்
னெட்டான அக்ஷய வருஷமாம்
பரவுகாற் திகைமாத தேதிபதி னாலுடன்
பருதி நாள் வளர்பக்கமும்
பகருத்திரட்டாதி திசமிகும் பத்தினிற்ப
பாருயிரெலாமுய்யவே
திருமருவு செம்பொன்மா மழைகளது பொழியவுந்
தில்லைமா னகர் வாழவுத்
தேவர்கள் துதிக்வு மூருடைய முதலியார்
சிற்சபையுள் மேவினாரே!

## திருவாரூர்ச் செப்பேடு - 7

அரசன் : விம்போசி
காலம் : 14.11.1886

**அமைப்பும், செய்தியும் :**

24.12.1648-ஆம் ஆண்டு தில்லையிலிருந்து நடராசர் வெளியேறிய செய்தி இச்செப்பேட்டில் கூறப்படுகிறது. பின்னர் 21.11.1684 அன்று சிதம்பரம் நடராஜர் கோயில் குடமுழுக்குச் செய்யப்பட்ட நிகழ்ச்சி ஒன்று முன் செப்பேட்டைப் போலவே இதிலும் கூறப்படுகிறது. 1686-இல் மீண்டும் ஒரு குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது. 1684 - 1686

ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் நடைபெற்ற குடமுழுக்கு விழாவை பற்றிய செய்தி இச்செப்பேடு மூலம் அறியப்படுகிறது. இதனுடைய மைய அரசு தொல்பொருள் துறையின் கல்வெட்டு பிரிவினர் படியெடுத்துள்ளனர். (ARE 1946-47 A.No.23)

இச்செய்தி விமான கலசத்திலும் பொறிக்கப் பெற்றதாகக் கூறப்படுவது அரிய செய்தியாகும்.

நடப்பு (சருவதாரி) ஆண்டில் மார்கழி மாதம் 25-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை பொன்னம்பலத்தை விட்டு மதுரையம்பதியில் எழுந்தருளியிருந்த சிவனுடைய ஆணையை நிறைவேற்றுபவரான சிற்றம்பல முனிவரால் ரத்தாட்சி வருடம் கார்த்திகை மாதம் 22-ஆம் தேதி இச்செப்பேடு விமான கலசத்தில் அலங்கரிக்கப்பட்டது.

பொன்னம்பலத்தில் கும்பாபிடேகம் முதலியவை அட்சய வருடம் கார்த்திகை மாதம் 14-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது. நடராசர் சிற்சபையுள் புகுந்து நடனமாடுகிறார்.

சுமார் 37 வருடம் பத்து மாதம் 20 நாட்கள் சபாநாயகர் சபையை விட்டு வெளியேறி இருந்தார். குல தீட்சதர்கள், பேரரசர்கள், சிற்றரசர்கள், சிவஞானிகள், சிறந்த யோகிகள், சகல மக்கள் ஆகியோர் அவருடைய பாத தாமரைகளில் ஈடுபாடு கொண்ட பக்தர்கள் சிவனை வழிபடுகின்ற ஆயிரக்கணக்கான உலகத்துக்கும் உடையவனான சிற்சபேசனை வழிபடுகின்றவர்களுக்காக சருவதாரி வருடம் மார்கழி மாதம் சபையிலிருந்து வெளியேறிய நடராசருக்கு சாம்போசி மகாராசரின் சம்மதத்தினால் கோபாலதாதாசியின் ஆணையின்படி ரத்தாட்சி வருடம் கார்த்திகை மாதம் வெள்ளிக்கிழமை பொன்னம்பலம் புதுப்பிக்கப்பட்டு அங்கே மெய்யாகவே நடராஜப் பெருமான் அலங்கரித்தார்.

நன்றி!

**- தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்**
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

## சங்க இலக்கியத்தில் முருக வழிபாடு - குறுந்தொகை

தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனி ; திகழ் ஒளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கை ; குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங்கொடி யோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே.

**~ பெருந்தேவனார்**

## காவடி எடுப்பது ஏன் ?

முருக பெருமானுக்கு பக்தர்கள் காவடி எடுக்கின்றார்கள். மற்ற எந்த கடவுளுக்கும் காவடி எடுக்கும் வழக்கம் இல்லை. தனிச் சிறப்பு வாய்ந்த காவடி எடுப்பதன் காரணம் என்ன?

சூரன் மற்றும் அசுரர்களுக்கு போர் வித்தை கற்பித்தவன் இடும்பன். அவன் மனைவி இடும்பி. முருக பெருமான் சூரர்களை அழித்த பிறகு, இடும்பனுக்கு வேலை இல்லாததால் வீரமகேந்திரம் விட்டு, வனத்தில் சிவனை வேண்டிக் கடும் தவம் புரிந்தான். சிவன் காட்சி அளித்து கேட்ட வரத்தின்படி, குன்றம் எறிந்த குமரனின் அடியனாய் மாறினான். தவம் புரிந்த இடம் இடும்ப வனம் ஆகும். தற்போது தஞ்சை மாவட்டம், இவ்வூர் முத்துப்பேட்டை அருகேயுள்ள கோவிலூர் பக்கத்தில் உள்ளது.

அகத்திய முனிவர் சிவகிரி, சக்திகிரி சிகரங்களை சிவ சக்தியாக வழிபட்டார். இரு சிகரங்களையும் தாம் இருக்கும் பொதிகை மலைக்கு கொண்டு வர விரும்பினார். முருகனின் அருளினால் திருகேதாரத்து வனத்தில் வைத்துவிட்டு பொதிகை மலைக்கு திரும்பினார். திருக்குற்றாலத்திற்கு அருகே இடும்பன் முனிவரை ஆட்கொள்ள வேண்டி வணங்கினான். அகத்திய முனிவர் இடும்பனுக்கு பெருமை சேர்க்கும் வகையில் திருகேதாரத்தில் விட்டு வைத்த இரு சிகரங்களையும் பொதிகைக்கு கொண்டு வர இடும்பனுக்கு சுப்பிரமணிய மூல மந்திரத்தையும், வழிபாடு முறையையும் உபதேசித்தார். அதன்படி பூர்ச்சவனத்தில் சிவகிரி, சக்திகிரியை கண்டு மூலமந்திரத்தை ஓதினான். அப்போது அஷ்ட நாகங்களும் கயிறுகளாக உறிபோல் உதவின. இரு சிகரங்களையும் அதில் வைத்து, முருகனை வேண்டி தென்திசை நோக்கிப் புறப்பட்டான்.

திருவாவினன் குடியை அடைந்தபோது அவற்றை இறக்கி வைத்து இளைப்பாறினான். அதன் பிறகு மீண்டும் காவடியை எடுக்க முயன்றான். முடியவில்லை. அங்கே ஒரு சிறுவன் தண்டு ஊன்றி நின்றதைப் பார்த்து கந்தன் என்று அறியாமல் போர் புரிய பாய்ந்தான். ஆனால் இடும்பன் அப்படியே மாய்ந்தான். இடும்பி மாங்கல்ய பிச்சை வேண்டினாள். முருகன் அருளால் உயிர் பெற்றான். இருவரும் முருகனை வணங்கினார்கள். அப்போது இரு மலைச் சிகரங்களும் இங்கேயே இருக்கட்டும் என்றும், மலை உச்சியில் யாம் எழுந்தருளி இருப்பதாகவும் அடிவாரத்தில் காவல் புரிவாயாக என்றும் முருகபிரான் அருளினார்.

பக்தர்கள் தரிசிக்க வரும்போது காவடி எடுத்து முதலில் அடிவாரத்தில் இடும்பன் இடும்பியை வணங்கி, பிறகு முருகனை தரிசித்து அருள் பெறுவார்களாக என்ற கட்டளைக்கேற்ப பக்தர்களும் இன்றும் காவடி எடுத்து கடம்பனாகிய கந்தனை வழிபாடு செய்து அருள் பெறுகின்றனர்.

நன்றி !

- ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்த ஜன சபை
நூற்றாண்டு விழா (1915 - 2015) மலர்
சென்னை

## ஸ்ரீமத் பாம்பன் குமர குருதாச சுவாமிகளின் சரித்திரம்

ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் மிகச் சிறந்த சைவஞான சிவச்சீலர். தமது இளமைக் காலம் முதற்கொண்டு தந்தைக்கு ஓம் எனும் பிரணவத்தை உபதேசித்த முழுமுதற் கடவுளாம் முருகப்பிரானின்பால் தீராத பற்று கொண்டு, அரிய பல பாக்களாக 6666 பாக்கள் பாடிச் சிறந்து விளங்கியவர். ஸ்ரீ சிவசுப்பிரமணியர் அருள் பெற்று பேரின்ப பெருவாழ்வு கண்டு மகிழ்ந்தவர் ஸ்ரீமத் குமரச குருதாச சுவாமிகள்.

ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் பாண்டிய-வள நாட்டில் இராமேச்சுரத்தைச் சார்ந்த பாம்பன் க்ஷேத்திரத்தில் சிவாலயத் திருப்பணி வேளாளர் சாத்தப்பப் பிள்ளைக்கும், செங்கமல அம்மாளுக்கும் பிரதம புத்திரனாக சுமார் 1850-ல் சுக்கிவாரஞ் சூரியோதயத்தில் அவதரித்தார். பெற்றோர்கள் அவருக்கு இட்ட திருபெயர் அப்பாவு.

தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், தெலுங்கு போன்ற பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவர். சிறுவயதிலேயே இந்து, கிருஸ்தவர் கோயில்கள் மற்றும் முகமதியர் மசூதி யாவும் நமக்கு அப்பாற்பட்ட தேவதைகள் விளங்குமிடமாகக் கருதி **"இறைவன் ஒருவன்" "எம்மதமும் சம்மதம்"** என்னும் தத்துவத்தை விளக்கியவர். இளம் வயதில் நாகநாதர் கோயிலில் நாட்டம் கொண்டு இறைவன் திருப்பணி போற்ற கலாசாலை விட நேர்ந்தன. சிறு வயதில் சஷ்டிகவசம் மனப்பாடம் செய்த காலத்திலேயே "சிவ சிவ" எனும் மந்திரத்தை அடுத்து முருகப் பெருமான் வசம் சேர்ந்தார்.

ஸ்ரீமத் சுவாமிகள் தனது 16-ஆவது வயதிலேயே சூரியோதய வேளையில் "**கங்கையை சடையிற் பரித்து**" எனும் முதல் பாட்டை அருளினார். இப்படியாக உண்பதற்கு முன் ஒவ்வொரு பாடல் பாடியதனால் சஷ்டிகவசம் பாராயணம் நின்று விட்டது. பெற்றோர்களின் ஏற்பாட்டின் பேரில் முகம்மதியருடன் நெல் வியாபாரம் தொடங்கினார். வியாபாரத்தில் நாட்டம் இல்லாமல் தினமும் பல பாக்களை எழுதியபோது புதுக்கோட்டை வித்துவான் குமாரசுவாமி பிள்ளை அவர்கள் சுவாமிகளைப் போற்றி மகிழ்ந்தார். விஜயதசமி அன்று அக்கினி தீர்த்தமாகிய சமுத்திர தீர்த்தத்தையடைந்து மூன்று முறை மூழ்கியெழுந்து திருநீறணிந்து திருமுருகப் பெருமானை வேண்டி ஸ்ரீமத் குமார சுவாமியத்திலே "**பரதனார் தலம் யாத்திரை செய் பரிவார்**" எனத் தொடங்கும் பாடல் பாடினார். முனீஸ்வரர் பற்றுடைய ஒருவர் பாம்பன் பதி குளக்கரையில் சுவாமிகளை முனியை முருகெனப் பாடுதி என்ற வேண்டுகோளுக்கு 'அம் புத நிறைந்து விரி' 'கம்மற் சிமிக்கி மிலை, அமர்களை யேனால் கொள' 'முடி பூண்ட மண்டலீ' என்று தொடரும் பாக்களைப் பாடியருளினார்.

ஸ்ரீமத் சுவாமிகள் கி.பி.1878 வெகுதானிய வருடம் வைகாசி திங்களில் ஸ்ரீமத் காளிமுத்தம்மாளை திருமணம் புரிந்தார். மூன்று வருடத்திற்குப் பின் முருகபிள்ளை, குமர குருதாசபிள்ளை என இரு மகன்களும், சிவஞானாம்பாள் எனும் மகளும் பிறந்தார்கள். துறவற வேட்கை கொண்டு குமரக் கடவுள் தனக்களித்த கட்டளை என நண்பர்களுக்குக் கூறி விட்டு பழனியை அடைந்தார். 'சிறுமை தீக்குயர் செல்வம்' 'துறவு நோக்கம் பிழை பொறுக்க முறையீடு' என்னும் பதிகங்களை நோக்கினால் இஃது நன்கு விளங்கும். கி.பி.1891-ல் கார்த்திகை மாதம் இராமேச்சுரத்தில் சண்முக கவசத்தைப் பாடி தமக்குற்ற ஓரல்லலின்று நீங்கி ,குணமடைந்தார். தம்மைக்காண வந்த நண்பர் வினவ, சிற்றின்ப வண்ணமொன்றை இனிமையாகப் பாடினார். அப்போது அதற்கெதிராக திருவனந்தபுரம் ந.சுப்பிரமணியபிள்ளை

குமார சுவாமியின் பேரில் வண்ணம் பாட வேண்டியதற்கிணங்கி ஸ்ரீமத் சுவாமிகள் பரிபூரண ஜன பஞ்சாமிர்த வண்ணத்தைப் பாடினார்.

பாம்பன் சேக்ஷகிரிராயரிடம் ஸ்ரீமத் சுவாமிகள் பரமனின் சக்தியை பல பொருளாகக் கொள்ளக்கிடப்பன எனக்கூறி, கொள்ளப்படுதலால் அறிவில் பொருள் அறிவுள் பொருளாதலும், அறிவுள் பொருள் அறிவில் பொருளாதலும் இல்லையென பகுத்தறிவினால் உணரலாம் எனக் கூறினார். இரும்பை இழுக்கும் அந்த சக்தி போல் பரமனுக்கு உலகெலாம் வியாபித்து தன்னை விரும்பும் பக்தர்கள் நெஞ்சத்தை இழுத்துச் சேர்த்துக் கொள்ளும் சக்தி இருக்கின்றது என்று உலகுக்கு உணர்த்தினார். ராயர் வியந்து இருபது வயதடைந்த ஸ்ரீமத் சுவாமிகளுக்கு பொன்னும் பொருளும் வழங்கி குமரகுருதாசர் எனப் பெயர் வழங்கி மகிழ்ந்தார். பின்பு சென்னை வாசியாய் ஸ்ரீமத் சுவாமிகள் விளங்கினார். "**பஞ்ச விஞ்சதி யதிக சதபங்கி**" எனும் விசித்திர கவி அவர் துறவறமடைந்த பின் பாடிய பாடலொடு சேர்க்கப்பட்டது. ஸ்ரீமத் சுவாமிகள் திருவாலவாய், காளத்தி, திருத்தணிகை, திருவண்ணாமலை ஆகிய ஊர்களுக்குத் தலயாத்திரை மேற்கொண்டு காஞ்சிபுரத்தை வந்தடைந்தார். அங்குள்ள குமர கோட்டத்தில் முருகப் பெருமான் திருவருள் பெற்று பொழுதாகிவிட்டதால் வீடு திரும்ப புகைவண்டி கிடைக்க வேண்டி அவ்வண்ணமே வண்டி கிடைத்த அதிசய நிகழ்ச்சியை ஸ்ரீமத் குமார சுவாமி வருகை விழைந்திரங்கலில் "**பிமரமீட்டஞ் செய்காஞ்சியினான் சில நாள்**" எனத் தொடங்கும் பாடலினால் அறியலாம்.

தனது சகோதரர் முத்தையாபிள்ளை மரணத்திற்குப் பின் மாதாவானவர் அழுது கொண்டிருக்க அவர் நித்திரையில் சுவாமிகள் உள்ளம் வருந்தாமல் அவரை மதிக்குமாறு கட்டளையிட்டு மறைந்தார். அதைக் கேட்டறிந்த ஸ்ரீமத் குமார சுவாமி திருவருட் செயல் ஞாபகத்தில் "**எம்பி முத்தையப் பெயருடையானன்**" என்று பாடினார்.

1893-ஆம் ஆண்டில் திருவனந்தபுரம் சென்று யாப்பிலக்கணம் கற்றுணர்ந்தார். அங்கு பரிமளம் பாடிய பின்னர் பத்துமநாப மூர்த்திகளைத் தரிசித்து விட்டு "**சீராரு நல்லி சயவாண்டு கன்னி பந்திங்கண் மதி**" எனத் தொடங்கும் பாடலைப் பாடி மகிழ்ந்தார்.

பின்பு கன்னியாகுமரி சென்று சக்தியை வணங்கி "**அலை மேவு பவ்வவள நீடு மங்கன்னியா குமரி** என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினார். சுசீந்திரத்தை அடைந்து பரமனை வேண்டி "**பக்தர் குழாஞ்சூழ் சுசீந்திரம் வாழுமை பங்கனைமா**" எனும் செய்யுளை பாடியருளினார். பின்னர் திருச்செந்தூர் சென்றடைந்து குமாரபிரானைத் தரிசித்து "**தண்டடச் சிந்து முத்தங்கொழிக்கின்ற தகைமையுடன்**" எனத் தொடங்கும் செய்யுளைப் பாடினார். திருநெல்லை சென்று தெய்வ தரிசனஞ் செய்து "**எல்லையிலா வொரு சோதி சரவணத்தெம் பெருமான்**" எனத் தொடங்கும் பாடலை அருளினார். திருவிச்சாபுரம் எனும் மதுரை சென்று "**பாண்டியன் மாணிக்க வேத்திரப் பேரடிப்பட்டவனும்**" எனத் தொடங்கும் சங்கரனைப் பற்றிய பாடலைப் பாடினார். கடைசியாக இராமேச்சுரம் அடைந்து இராமநாத சுவாமியையும், பருவதவர்த்தனியையும் சுப்பிரமணியம் என்று கருதி வணங்கிய பாடல் "**கார்சேர் கடனனி சூழ் சேது மத்தியிற் கரகுத்தனார்**" எனத் தொடங்கும் பாடல் ஆகும். பின்பு நாகப்பட்டினத்தில் கார்த்திகேய சுவாமிகள் சந்திப்பு கிடைத்தது. அவர் ஆண்டவன் அருள் பெற்று திரு உத்தர கோசமங்கைச் சிவாலயத்துக்குப் பாத்தியப்பட்ட குமாரராலயத் திருப்பணி மேற்கொண்டுள்ளதை "**திங்கட் சடையவன் மங்களை திகமுஞ்சிவ கோச**" எனத் தொடங்கும் பாடலைப் பாடினார்.

திருத்தல தரிசனத்திற்குப் பின் சுமார் இரண்டு வருடம் பாடலுமின்றி அதிக வார்த்தை ஆடலுமின்றி வீற்றிருந்தார். துறவறம் மேற்கொண்டு பாம்பன் மீண்டும் செல்லாது வீற்றிருந்தார். நெல்லை, மதுரை, திருவாதவூர் திருத்தலங்களுக்குச் சென்று சென்னை மாநகர் போந்தார். அப்போது சென்னை வைத்தியநாத தெருவில் தபச சீருடைப் பெரிய அம்மாளாயுள்ளார், தம் கனவில் ஸ்ரீமத் சுவாமிகள் தோன்றி உபசாரம் செய்ய கடமைப்பட்டதாகக் கூறி அவரை வரவேற்று அவ்வண்ணமே உபசரித்தார். மயூரத்தின் மிசை இறைவன் பால் பக்தி கொண்ட அவ்வம்மையார் வேண்டுதலுக்கு இணங்கி துறவறம் தாரணஞ் செய்தார். இவரது பெயரே குமரவேள் பதிற்றுப் பத்தந்தாதியில் "**குமாரானந்தம்**" என வருகிறது. பின்பு சிதம்பரம் அடைந்து இராஜாமுத்து கிருஷ்ண நாயுடு உபசரிப்பில் இருந்து வந்தார். அங்கு தகராலய ரகசியம், கந்தரொலி யலந்தாதி, குகப்பிரம வருட் பத்து, திருப்பா எனும் நூல்களை வழங்கினார். திருநெல்வேலி சிக்க நரசையனூரில் நயினார் பிள்ளை வீட்டில் தங்கியிருந்தபோது மூட்டைப் பூச்சியைக் கொன்றதாக அன்று இரவு உணவு கொள்ளாமல் இருந்தது ஸ்ரீமத் சுவாமிகளின் சீவகருணிய நிகழ்ச்சியாகத் திகழ்கின்றது. மீண்டும் சிதம்பரம் சென்று ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் தன் முன் தோன்றிய இளைஞர் குமரக் கடவுளாகக் காட்சி அளித்து 'சென்னை செல்க' எனும் கட்டளையிட்டு மறைந்த நிகழ்ச்சியை சிரமேற்கொண்டு மீண்டும் சென்னை சென்றார். திருவொற்றியூர், திருவான்மியூர், திருமயிலை சென்று சிவகுமார தரிசனஞ் செய்தார். அப்போது அன்னையார் மரித்தபோது சீடரை உத்தரகிரியைகளைச் செய்யும்படி அறிவித்து இவ்வுடம்பை ஈன்றாளாக்கும் நற்கதி கொடுக்க முருகபிரானை வேண்டி அருளினார்.

1902-ல் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் காசி யாத்திரை மேற்கொண்டார். காசி பாம்பன் மடத்தில் சிறப்பாக வரவேற்பளிக்கப்பட்டது. சென்னை திரும்பியதும் காலில் கட்டிகள் தோன்ற இறைவன் சிறுவனாகத் தோன்றி மருந்து பூசி கட்டிறைத்த காரியம் அவ்வீட்டில் உள்ள ஜெகதாம்பாளென்னும் பெண்மணி கனவின் வாயிலாகத் தெரியவந்தது. இந்நிகழ்ச்சிகள் ஸ்ரீமத் குமார சுவாமியத்தின்... சென்ற சேர்வாசியான காலூரு மீது கோண்டா எனும் பாடலினால் அறியலாம். பின்பு ஸ்ரீமத் சுவாமிகள் பாடியருளிய சஸ்திர பந்தம், மயூரபந்தம் கமலபந்தம், பிறிது படு துவிதபங்கி, பிறிது படு திரிபங்கி, பிறிது படு பாட்டு, பகுபடு பஞ்சகம், சஷ்டி வகுப்பு, தங்க ஆனந்த களிப்பு, அனவரத பாராயணம் என பத்து பிரபந்த புத்தகமாயின. முக்காடு இட்டு முருகனை தரிசிக்க திருத்தலம் பல சென்றார். தம் மூத்த குமாரர் மரண மாயினாரென்பதை நிஷ்டை வாயிலாகவே அறிந்து நள்ளிரவில் வெளிவந்த வேளையில் இறைவனை நாடியிருக்க மனம் வருந்தா என்று தேவரீர் ஓசை கேட்டு தேற்றிக் கொண்டார். 1904-ல் மாணிக்க வாசக சுவாமிகள் ஊமைப் பெண்ணை பேசும்படி செய்தருளியத் தலமான சிதம்பரத்தை அடுத்த பின்னத்தூரில் சைவ வைணவ ஊடலை ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வழக்காடி வெற்றி கண்ட நிகழ்ச்சி நாலாயிரப் பிரபந்த விசாரமென்ற நூலில் காணப்படுகின்றது. சைவச் சீடர்களுடன் பலகாலம் சென்னை புதுப்பாக்கத்தில் (இராயப்பேட்டை) தங்கியிருந்து திருவாறெழுத்தை உபதேசம் செய்தார். 1915-ல் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்ரமணிய பக்த ஜன சபைக் கால் நிலை பொறுத்தினார். அப்போது சைவச் சீலர் ச.சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் சீடராக ஏற்கப்பட்டார். 1918-ல் ஸ்ரீமத் சுவாமிகளுக்கு வெப்பு நோய் கண்டு குமாரஸ்தவம் பாடிய போது, நோய் நீங்கி குணமடைந்தார் என்பது வியக்கத்தக்கது. 1922-ல் வேதாந்த சித்தாந்த சமரச நயப் பாட்டினை திறம்பட கூறும் சிவஞானதீபம் என்னும் வசன நூலை இயற்றினார்.

அப்போது திருவல்லிக்கேணி கடற்கரையில் அடிகள் பல அறிவுரை வழங்கினார். 1923-ல் சென்னை தம்பு செட்டி தெரு அருகில் ஸ்ரீமத் சுவாமிகளின் இடது கால் மீது குதிரை வண்டி ஏறி எலும்பு முறிந்துவிட்டது. இராயப்பேட்டை ஸ்ரீ சிவசுப்ரமணிய பக்த ஜன சபையிற் தங்கி பொது மருத்துவமனை சென்று வந்தார். பொது மருத்துவமனையில் சண்முக கவசத்தை பாராயணம் நடத்தி இருவேல்களின் செயலால் முறிந்த கால் கூடிய அதிசயம் நிகழ்ந்தது. பொது மருத்துவமனையில் இன்றும் அவர் தங்கியிருந்த வார்டு நெம்பர்-7 அதை நினைவுபடுத்தும் வகையில் அமைந்துள்ளது.

பதினோராவது நாளிரவு முருகபிரான் மயூர வாகன தரிசனம் கண்டு வணங்கினார். தம் படுக்கையில் தம்மோடு ஒரு குழந்தையைக் கண்டு களித்திருக்கும் போது அக்குழந்தை திடீரென மறைந்ததும் பாலமுருகனையே நினைத்திருக்கும் வேளையில் பதினைந்து நாட்களில் இரணம் ஆறி மறைந்தது. இறைவனின் திருவருள் இன்றி வேறெதுமில்லை என நினைத்து மகிழ்ந்தார். தனக்குப் பெருமை தேடிக் கோடலும் பிறர்க்குச் சிரமம் நல்கலும் துறவக் கேடு என்று எண்ணிய ஸ்ரீமத் சுவாமிகள். 1926-ல் ஆங்கிலத்தில் உயில்சாசனம் எழுதி ரிஜிஸ்தர் செய்து வைத்தார். மஹாதேஜோ மண்டலத்தில் உட்பூசல் ஏற்பட்டமையால் மீண்டும் 1927-ல் கோடிசில் எனும் உயில் அனுபந்த சாசனமொன்றைத் தமிழில் எழுதி ரிஜிஸ்தர் செய்தார். 1929-ல் திருவான்மியூரில் நிலம் ஒன்றை வாங்கி வைத்தார். அப்போது மயூரவாகன விழாவை விடாது செய்யும்படி வேண்டினார். வெய்யிற் கொடுமையினால் பெங்களூர் செல்ல பயணச் சீட்டும் அன்று வாங்கி வைத்தார். தன் முடிவைத் தானே அறிந்து பயணத்தை ரத்து செய்த ஸ்ரீமத் சுவாமிகள் 30.05.1929 காலை 7.15-க்கு யாவருமறிய சுவாசத்தை உள்ளுக்கிழுத்தார். அது வெளிவராமல் சுவாமிகள் அடங்கியது அந்நிலை ஆகும். அது நிகழ்ந்தது சுக்கில வருஷம் வைகாசி மாதம் சஷ்டி திதி அவிட்ட நட்சத்திரம் கூடிய சுபதினமாகும்.

ஸ்ரீமத் பாம்பன் குமரகுரதாச சுவாமிகள் திருவடி வாழ்க !

நன்றி !

**- ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்த ஜன சபை**
நூற்றாண்டு விழா (1915 - 2015) மலர்
சென்னை

❋❋❋❋❋❋❋ ❋❋❋❋❋❋❋

## விடை தேடும் வினா - வாரியார் தரும் விளக்கம்

**கேள்வி : முருகன் கையில் வேலும் - சேவற்கொடியும், கீழே மயிலும் - பாம்பும் வைத்திருப்பதன் உட்பொருள் என்ன?**

**பதில் :** வேல் - ஞானம், மயில் - விந்து, சேவல் - நாதம், நாதவிந்து கலாதீ என்பதனால் அறிக. பாம்பு - குண்டலி, குண்டலி என்ற பாம்பை ஓம் என்ற மயில் அடக்குகிறது.

# குமாரஸ்தவம்

பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் பாடியருளிய குமாரஸ்தவம் ஓர் மந்திர நூலாகும். முருகப் பெருமானின் அனைத்து சொரூப நிலையைப் போற்றி வணங்கும் பாடல். பின்வரும் 44 அடிகளையுடைய பாடலுடன் பொருளையும் புரிந்து போற்றுவது சாலச் சிறந்ததாகும்.

1. **ஓம் ஷண்முக பதயே நமோ நம**

   பொருள் : ஆறுமுகத் தலைவனே போற்றி

2. **ஓம் ஷண்மத பதயே நமோ நம**

   பொருள் : ஆறு சமயங்களான சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணா பத்யம், கௌமாரம் ஆகியவற்றிற்குத் தலைவனே போற்றி.

3. **ஓம் ஷட்கரீவ பதயே நமோ நம**

   பொருள் : ஆறு திருக்கழுத்துக்களை உடைய தலைவனே போற்றி.

4. **ஓம் ஷட் கிரீட பதயே நமோ நம**

   பொருள் : ஆறு கிரீடங்களை அணிந்துள்ள தலைவனே போற்றி.

5. **ஓம் ஷட்கோண பதயே நமோ நம**

   பொருள் : சரவணபவ என்ற ஆறு கோண சக்கரத்தில் எழுந்தருளியிருக்கும் தலைவனே போற்றி.

6. **ஓம் ஷட்கோச பதயே நமோ நம**

   பொருள் : ஆறு தோத்திர பாடல்களான திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தலரங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு ஆகியவற்றிற்குத் தலைவனே போற்றி.

7. **ஓம் நவநிதி பதயே நமோ நம**

   பொருள் : ஒன்பது வகையான செல்வங்களுக்குத் தலைவனே போற்றி.

8. **ஓம் சுபநிதி பதயே நமோ நம**

   பொருள் : முக்தி எனப்படும் பேரின்பத்தின் தலைவனே போற்றி

9. **ஓம் நரபதி பதயே நமோ நம**

   பொருள் : மண்ணுலக மக்களின் அரசனாக விளங்கும் தலைவனே போற்றி

10. **ஓம் சுரபதி பதயே நமோ நம**

    பொருள் : சுரர் எனப்படும் தேவர்களுக்குத் தலைவனே போற்றி

11. ஓம் நடச் சிவ பதயே நமோ நம

பொருள் : நடனம் ஆடும் சிவனாகிய தலைவனே போற்றி

12. ஓம் ஷடாக்ஷர பதயே நமோ நம

பொருள் : சரவணபவ என்ற ஆறெழுத்து தலைவனே போற்றி

13. ஓம் கவிராஜ பதயே நமோ நம

பொருள் : அகத்திய மாமுனிவர் போன்ற கவியரசர்களின் தலைவனே போற்றி

14. ஓம் தபராஜ பதயே நமோ நம

பொருள் : மனம், மொழி, மெய் ஒருங்கிணைந்து கடவுளை நினைப்பவர்க்கு அரசான தலைவனே போற்றி

15. ஓம் இகபர பதயே நமோ நம

பொருள் : மண்ணுலக, விண்ணுலக இன்பத்தை அளிக்கும் தலைவனே போற்றி

16. ஓம் புகழ்முனி பதயே நமோ நம

பொருள் : திருப்புகழ் பாடிய அருணகிரிநாதத் தலைவனே போற்றி

17. ஓம் ஜய ஜய பதயே நமோ நம

பொருள் : புராண வரலாற்றில் நாரதர், இந்திரன, பிரமன், சூரர்களை வெற்றி கண்ட தலைவனே போற்றி

18. ஓம் நய நய பதயே நமோ நம

பொருள் : ஆறுமுகமும் ஆன்மாக்களுக்கு நன்மை, இன்பங்களை அளிக்கும் தலைவனே போற்றி

19. ஓம் மஞ்சுள பதயே நமோ நம

பொருள் : அழகு என்னும் முருகனே போற்றி

20. ஓம் குஞ்சரி பதயே நமோ நம

பொருள் : தேவ குஞ்சரி தெய்வயானையின் தலைவனே போற்றி

21. ஓம் வள்ளி பதயே நமோ நம

பொருள் : வள்ளியம்மைக்குத் தலைவனே போற்றி

22. ஓம் மல்ல பதயே நமோ நம

பொருள் : மற்போரில் வல்லவனான தலைவனே போற்றி

23. ஓம் அஸ்த்ர பதயே நமோ நம

பொருள் : கையை விட்டு சென்று பகைவரைத் தாக்கும் படைகளின் தலைவனே போற்றி

24. **ஓம் சஸ்திர பதயே நமோ நம**

பொருள் : வாள், வில், கதை போன்ற கைவிடா ஆயுதங்களையுடைய தலைவனே போற்றி

25. **ஓம் சஷ்டி பதயே நமோ நம**

பொருள் : கந்த சஷ்டி விரதத்தின் தலைவனே போற்றி

26. **ஓம் இஷ்டி பதயே நமோ நம**

பொருள் : வேள்வி செய்து முடிப்பவனின் தலைவனே போற்றி

27. **ஓம் அபதே பதயே நமோ நம**

பொருள் : சத்து எனும் சிவனும், சித்து எனும் தேவியும், ஆனந்தம் எனும் அறுமுகனும் வேற்றுமை பேதமின்றி போற்றுபவனே போற்றி

28. **ஓம் சுபோத பதயே நமோ நம**

பொருள் : அஞ்ஞானத்தை நீக்கி மெய் ஞானத்தை அருளும் தலைவனே போற்றி

29. **ஓம் வியூஹ பதயே நமோ நம**

பொருள் : அசுரர்களை வீழ்த்திய சேனைப் படைகளின் தலைவனே போற்றி

30. **ஓம் மயூர பதயே நமோ நம**

பொருள் : மயில் வாகனத் தலைவனே போற்றி

31. **ஓம் பூத பதயே நமோ நம**

பொருள் : பூத வீரர்களின் தலைவனே போற்றி

32. **ஓம் வேத பதயே நமோ நம**

பொருள் : ஈசுவரனின் நாத பிரம்மமான ஓம் என்ற மந்திரத்திலிருந்து பிறந்த வேதங்களுக்குத் தலைவனே போற்றி

33. **ஓம் புராண பதயே நமோ நம**

பொருள் : பதிணென் புராணங்களின் தலைவனே போற்றி

34. **ஓம் பிராண பதயே நமோ நம**

பொருள் : ஆன்மா எனும் உயிர்களுக்குத் தலைவனே போற்றி

35. **ஓம் பக்த பதயே நமோ நம**

பொருள் : முருகப் பெருமானின் பக்தர்களாகிய அடியார்களுக்குத் தலைவனே போற்றி



## 1. சஸ்திர பந்தம்

வாலவே தாந்தபா வாசம்போ கத்தன்பா

மாலைபூ ணேமதிற மால்வலர்தே - சாலவ

மாபாசம் போக மதிதேசார் மாபூதம்

வாமபாதந் தாவேல வா.

பாட்டு 55 எழுத்து  சித்திரம் 30 எழுத்து

## 2. மயூர பந்தம்



வரதந திபநக ரகமுக வொருகுக வறிதுத புவிரி விதி

மரகத வரிபுர மதுகளி லசலவி மலமழ வெனலிரிய

மரபுறு குறுமுனி வருதிம யலசர மதிவிரி விபுதகுரு

சுரபதி நவரச பரததி நகரம துகமழ முனிவருதி.

பாட்டு 100 எழுத்து  சித்திரம் 64 எழுத்து

நன்றி !

- ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்த ஜன சபை

நூற்றாண்டு விழா (1915 - 2015) மலர்

சென்னை

உ

திருச்சிற்றம்பலம்

## சிதம்பரம் தலச்சிறப்புகள்

**"கோயில்"** என்றாலே சிதம்பரம் **ஸ்ரீ நடராஜர்** (சபாநாயகர்) **ஆலயம்** தான்.

சிதம்பரம் ஆகாசக்ஷேத்திரம், பஞ்சபூதங்களில் ஆகாசம் முதன்மையானது. **தில்லை** என்றும் **பொன்னம்பலம்** என்றும் பெயர்கள் உள்ளன.

பாரத நாட்டிலேயே முத்தி ஸ்தலங்களிலும், பாடல் பெற்ற ஸ்தலங்களிலும், பஞ்சபூத ஸ்தலங்களிலும், பஞ்ச சபைகளிலும் **சிதம்பரம் முதன்மையானது.**

ஸ்ரீ ஆனந்த நடராஜமூர்த்தியே **பஞ்சாட்சர** வடிவமானவர். சிதம்பரம் பதஞ்சலி, வியாக்கிரபாதர், உபமன்யு மகரிஷிகள் மற்றும் நாயன்மார்களும் ஸ்ரீ நடராஜரை பூஜித்து, போற்றி, பாடி முத்தி அடைந்த இடமாகும். திருமூலர், பட்டினத்தார், அருணகிரிநாதர், ராமலிங்க அடிகள், ஆறுமுகநாவலர் முதலியவர்கள் போற்றிப் பாடியிருக்கிறார்கள். நந்தனார் ஸ்ரீ நடராஜரை பக்தியுடன் தரிசித்து முத்தி அடைந்த ஸ்தலம் இத்தலம்.

ஸ்ரீ நடராஜர் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்மன் வீற்றிருக்கும் இடம் **பஞ்சாக்ஷரபீடம் சித்சபையாகும்.** இச்சபையோடு **கனகசபை, நிருத்யசபை, தேவசபை** (பேரம்பலம்), **ராஜசபை** (ஆயிரங்கால் மண்டபம்) என்று ஐந்து சபைகள் உள்ளன.

சித்சபையின் ஐந்து படிகள் வெள்ளி பஞ்சாக்ஷரபடிகள் எனப்படும். இதுவே திருக்கனிற்றுப்படியும் ஆகும். ஒன்பது தங்க கலசங்கள் நவசக்தியாகும். பத்து தங்க தூண்கள், நான்கு வேதம், ஆறு சாஸ்திரங்கள் ஆகும். 18 வெள்ளித் தூண்கள், பதினெட்டு புராணங்கள், 28 ஆகமங்கள் விதான கால்களாகும். 64 கை மரங்கள், ஆயகலை 64 ஆகும். சிவாயநம அக்ஷரங்கள் எழுதியுள்ள 21600 தங்க ஓடுகளும் மனிதனின் நித்ய சுவாசம் ஆகும். 72000 ஆணிகள் மனிதர்களின் ஆதார நாடிகள் நரம்புகள் எனக் கருதத்தக்கவை.

**சிதம்பர ரகசியம் :**

இறைவன் இங்கு ஆகாய உருவில் உருவமில்லாமல் காணப்படுகிறார். ஸ்ரீ சக்ர சிதம்பர சம்மேளனயந்திரம், ஸ்ரீ நடராஜமூர்த்தியை அரூபமாக தியானம் செய்ய பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. **ஸ்ரீ நடராஜர் யந்திரத்தை** பக்தர்கள் தெரிசிக்க தங்கத்தினால் ஆன வில்வ மாலை அலங்கரிக்கிறது.

உலகிலுள்ள எல்லா மதங்களும் இறைவன் வழிபாட்டிற்கு உரு, அரு, உருஅரு ஆகிய மூன்றில் ஒன்றை கடைபிடிக்கின்றன. சிதம்பரம் மூன்றுவித வழிபாடுகளையும் ஒன்றாகக் கொண்டு விளங்குகிறது. உரு (ஸ்ரீ நடராஜர்) உருஅரு (ஸ்படிகலிங்கம்) அரு (சிதம்பர ரகசியம்) என்பவை. ஆகவே சிதம்பரம் சகலமத மக்களும் வழிபட வேண்டிய ஏற்புடைய பொது ஸ்தலம்

ஆகும். ஸ்ரீ நடராஜர் அருகில் கர்ப்பகிரஹத்தில் பல நூற்றாண்டுகளாக இன்றும் அணையா நெய் விளக்கு (ஜோதி) எரிந்து கொண்டிருக்கிறது.

கங்கையின் நீர் சிதம்பரம் கோயில் **பரமானந்த கூபம்** என்ற கிணற்றிற்கு வருவதாக ஐதீகம். அபிஷேகத்திற்கு தீர்த்தம் தினமும் அதிலிருந்து தான் உபயோகிக்கப்படுகிறது. **சிவகங்கை** என்ற எக்காலத்திலும் வற்றாத புனித புஷ்கரணி உண்டு. அபிஷேக தீர்த்தம் இதில் வந்தடைகிறது. சுவேத வர்ம அரசன் (கி.பி. 550) ஸ்ரீ வியாகிரபாத ரிஷியின் ஆணைப்படி தினமும் காலையில் ஸ்நானம் செய்து வந்ததால் அவனுடைய குஷ்டரோகம் நிவர்த்தியாகி அவன் தங்கமயமான மேனி பெற்று, ஹிரண்ய வர்ம சக்ரவர்த்தி என்று பெயர் கொண்டான் என்பது வரலாறு.

**பூஜை :** தினமும் ஆறுகால பூஜை ஷோடசோபசார (16 உபசாரங்கள்) ஆராதனை பூஜைக்கு முன்பு ஸ்ரீ நடராஜரின் திருமுடியின் சந்திரனின்று உண்டான ஸ்படிக லிங்கத்திற்கு (ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரர் பெயர் கொண்ட) வைதீக முறைப்படி அபிஷேகம் நடைபெறும். ஸ்ரீ நடராஜமூர்த்தியின் திருஉருவமான மாணிக்கமயமான ஸ்ரீ ரத்னசபாபதி என்கிற மரகத நடராஜரின் அபிஷேக தரிசனம் காலை இரண்டாவது காலத்தில் 10.00 மணிக்கு மட்டும் நடைபெறும்.

ஸ்ரீ நடராஜர் ஸ்ரீ சிவகாமசுந்தரிக்கு வருஷத்தில் ஆறு அபிஷேகம், ஆனி, மார்கழி இரு மாதங்களில் இரண்டு மஹோத்ஸவங்கள் உத்தராயணத்திலும், தக்ஷிணாயனத்திலும் முறையே உத்திரம், திருவாதிரை நக்ஷத்திரத்தை கொண்டு 10 நாட்கள் திருவிழா நடைபெறும். சிதம்பரம் கோயிலில் ஸ்ரீ முக்குறுணி விநாயகர், ஸ்ரீ சிவகாமி அம்மன் (பராசக்தி) சன்னதி, குமரகோட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி சன்னதி, ஸ்ரீ சுப்பிரமணியர் (பாண்டி நாயகம்) சன்னதி, நடன சிற்பகலைகள், தில்லைகாளி கோயில் முதலிய கோயில்கள் முக்கியமாக தெரிசிக்க வேண்டியவைகள்.

**சிதம்பரத்தை தெரிசித்தாலே மஹா புண்ணியம் :**

**பலன்கள் :**
1. வாழ்க்கை சந்தோஷமாக இருக்கும்
2. ஆரோக்யமாக இருப்பார்கள்
3. வம்ச விருத்தி உண்டாகும்
4. ஞானம் பெருகும்.
5. மேன்மை அடைவார்கள்
6. சுபிக்ஷம் உண்டாகும்.

**சிவ சிவ ஹரஹர ஹரஹர சிவசிவ**

திருச்சிற்றம்பலம்

தொகுப்பு : **C.P.K.ஸ்ரீதரன் செங்குந்தர்**
சிதம்பரம்



மலைக் கோபுர வாயிலில் புதுப்பொலிவுடன்
திகழும் குமரகோட்டம் கோயில்



வண்ணமிகு கருவறை விமானம்

குமரக்கோயில் என அழைக்கப்பெறும் ஸ்ரீ குமரகோட்டம்



புதிதாக அமைக்கப் பெற்ற மண்டபத்தின் முகப்பில் கண் குளிரக் காட்சிதரும்
ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ செல்வமுத்துக்குமார ஸ்வாமி

## பொன்மொழிகள்

– திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்

1. இரைதேடுவதோடு இறையுந்தேடு
2. வேலை வணங்குவதே வேலை
3. உணவு தேடுவதோடு உணர்வுந் தேடு
4. ஆலும் வேலும் பல்லுக்குறுதி,
   நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி,
   பாலுந் தேனும் உடலுக்குறுதி,
   வேலும், மயிலும் உயிருக்குறுதி.
5. உளம் வசமானால் உலகம் வசமாகும்.
6. அயர்ச்சியில்லா முயற்சி உயர்ச்சி தரும்.
7. வெள்ளம் உயர்ந்தால் மலர் உயரும்.
   உள்ளம் உயர்ந்தால் உயர்வு வரும்.
8. மருந்துக்குப் பத்தியம் ; தெய்வத்துக்குச் சத்தியம்.
9. பெண்ணுக்கு அணிகலம் அடக்கம்.
   கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் (தாட்சண்யம்)
10. நிமிர்ந்தால் பதர் ; பணிந்தால் கதிர்.

– தொகுப்பு : காசியாத்திரை புண்ணியர். **ஜா. ராகவன்**

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## சிவபெருமான் வணக்கம்

உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ யிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்; பொன்னம்பலத்துளம்
முடியா முதலே என் கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

– மணிவாசகர்

உம்பரில் கூத்தனை உத்தமக் கூத்தனை
செம்பொன் திருமன்றுள் சேவகக் கூத்தனை
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடி என் அன்பில்வைத் தேனே

– திருமூலர்



சபாநாயகர் கோயில் ஆனித் திருமஞ்சன
உற்சவம் - கொடியேற்றம்



திருக்கார்த்திகை தீபம் -
சொக்கர்பனை



செங்குந்த நவவீரர் ஊர்வலம்
புறப்பாடு



சூரசம்ஹார உற்சவத்தில் இயமன்
குமரப் பெருமானை வணங்க வருதல்



கந்தசஷ்டி சூரசம்ஹார உற்சவத்தில்
நாரதர்



கந்தசஷ்டி சூரசம்ஹார உற்சவத்தில்
கட்டியம்

பகவான் முதலியார் தெரு நாட்டாண்மைத் தலைவர் இல்லத்தில்
நடக்கும் பொதுக்குழுக் கூட்டம் - வீரவாகு தேவர் நியமனம்

பொதுக்குழுக் கூட்டத்தில் விழாக்குழுவினர்க்குச்
சிறப்புச் செய்தல்

உ

திருச்சிற்றம்பலம்

# தில்லைப் பெருங்கோயிலில் செங்குந்தர் நிகழ்த்தும் உற்சவங்கள்

Er. S. சிவசங்கரன் செங்குந்தர்

சிதம்பரம்

வானளாவ உயர்ந்து நிற்கிறது தெற்குத் திருக்கோபுரம். சொக்கசீயன் எழுநிலைக் கோபுரம் என கல்வெட்டுகள் குறிக்கும் இக்கோபுரத்தின் உச்சியில் இருபுறங்களிலும் பட்டொளி வீசிப் பறக்கின்றது காவிநிறத்துக் தருமக்கொடி. ஆனி மாதத்து உத்தர தரிசன விழாவின் தொடக்க நாளிலும், கொடியேற்றத்தின்போதும் இக்கொடி கோபுரத்தில் இருபுறங்களிலும் பறக்கவிடப்படும். "**துவஜாரோகணம்**" என்னும் கொடி உயர்த்தும் உற்சவத்தை ஆனி மாதத்தில் தென்பகுதிச் செங்குந்தர்களும், மார்கழிமாதத்தில் வடபகுதிச் செங்குந்தர்களும் நிகழ்த்துகின்றனர். ஆனித் திருமஞ்சன உற்சவக் கொடியேற்றத்தினைச் சிதம்பரம் தெற்குத் தெரு செங்குந்த மரபினரின் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர் & டிரஸ்டி சிவத்திரு.டாக்டர். **தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்கள் நிகழ்த்தி வருகின்றார்கள். வாழையடி வாழையென இவர்தம் முன்னோர்களால் பன்னெடுங்காலமாய் இவ்விழாக்கள் நிகழ்த்தப் பெறுகின்றன.

கொடியேற்ற உற்சவம் கொடியேற்றத்திற்கு இரண்டு நாள்கள் முன்னதாகவே தொடங்கிவிடும். முதல்நாள் மிருத்சங்கிரணம், ரட்சாபந்தனம், வாஸ்து சாந்தி நிகழும். அடுத்தநாள் விக்னேஸ்வரபூஜையும், நடராஜர் அனுஞ்ஞையும் நிகழும். துவஜபடபூஜை நிகழ்ந்து விடைக்கொடியைத் திருவீதி வலமாக கொண்டுவந்து யாகசாலையில் வைத்துப் பூசிப்பர். கொடியேற்றத்தின் முதல்நாள் இரவு சண்டேசுவரர் திருவீதி வலம் கொண்டு அருள்வார்.

கொடியேற்ற உற்சவத்தன்று காலை சோமாஸ்கந்த மூர்த்தி சிற்றம்பலத்தின் முன் எழுந்தருளி வழிபாடு கொண்டருளுவார். பின்னர் கொடி மரத்தருகே பஞ்சமூர்த்திகள் எழுந்தருளுவர். தொடர்ந்து அஸ்திரதேவர் பூஜை நிகழும். உற்சவ ஆச்சாரியார் கொடியேற்றுவார். அதேநேரத்தில் தெற்குக் கோபுரத்திலும் கொடி கட்டப் பெறும். பஞ்சமூர்த்திகட்கும் கொடிக்கும் ஒரே நேரத்தில் தீபாராதனை நிகழும். இரவு கொடி மரத்தின் அருகே மத்தள பூஜை நிகழும். இதனை "**பேரீதாடனம்**" என்பர். உற்சவ ஆச்சாரியார் மத்தள பூஜை செய்து, அதனைக் கையினால் தட்டி மங்கல ஒலி எழுப்புவதே பேரீதாடனம் ஆகும். இரவு பஞ்சமூர்த்திகள் தங்கம், வெள்ளி மஞ்சங்களில் திருவீதி வலம் வருவர். அப்போது எட்டுத் திக்குகளிலும் மந்திர பூர்வமாக திக்பந்தனம் செய்யப்படும்.

இரண்டாம் நாள் திருவிழாவில் காலை பஞ்சமூர்த்திகள் வீதியுலா நிகழும். இந்த நிகழ்வு வரை தொடர்ந்து பன்னெடுங்காலமாக செங்குந்த மரபினர் சார்பாக டாக்டர்.**தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்களின் முன்னோர் காலந்தொட்டு நிகழ்த்தப்பெறுகின்றது.

<u>கந்தசஷ்டி சூரசம்ஹாரம்</u> :

ஐப்பசி மாதம் அமாவாசையை அடுத்த பிரதமை திதியில் குமரகோட்டத்தில் கந்தசஷ்டி உற்சவம் காப்புக்கட்டுதலுடன் தொடங்கும். யாகசாலையில் வேள்விகள் நிகழ்த்தி முறையாக வைதீக முறைப்படி காப்புக்கட்டுதல் தொடங்கி 7 தினங்கள் இந்த உற்சவம் நிகழும். அம்மன் கோயில் பூரச் சலங்கை உற்சவம் ஐப்பசி மாத நிறைவில் நடந்தால் அந்த ஆண்டு மட்டும் கார்த்திகைச் சஷ்டியில் இந்த உற்சவம் நடக்கும். இந்த உற்சவத்தை **சம்பக சஷ்டி** அல்லது **சுப்ரமண்ய சஷ்டி** என்று கூறுவர்.

சஷ்டி உற்சவத்தின் முதல்நாள் தொடங்கி திருக்கல்யாணம் வரை ஏழு தினங்களும் குமரக்கோட்டத்திற்கு எதிரே அமைந்துள்ள அன்னக்கார வாசல் மண்டபத்தில் சமய சொற்பொழிவுகளும், திருமுறை மற்றும் திருப்புகழ் இசையரங்குகளும், பரதநாட்டியம் முதலிய கலை நிகழ்ச்சிகளும் தில்லைவாழந்தணர்களில் ஒருவர் தலைமையில் செங்குந்த மரபினர் முன்னிலையில் நிகழும்.

விசேஷ அபிஷேகங்கள், அலங்காரம், யாக வேள்விகளுடன் சுவாமி திருவுலாப் புறப்பாடு நிகழும். ஐந்தாம் நாள் சுவாமி புறப்பாட்டிற்குப் பின் இரவு 9.00 மணியளவில் பகவான் முதலியார் தெருவிலுள்ள நாட்டாண்மைத் தலைவர் இல்லத்தில் நாட்டாண்மைத் தலைவர் அவர்களின் தலைமையில் தெற்குத் தெரு செங்குந்த மரபினரின் பொதுக்குழுக் கூட்டம் நடைபெறும்.

இக்கூட்டத்தில் வீரவாகு தேவர்கள், நாரதர், கட்டியம், இயமன் ஆகிய பதங்களுக்கான வேடங்கள் நியமனம் செய்யப்பெறும். தென்பகுதியை 8 பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவிற்கும் ஒருவர் என வீரவாகு தேவர்கள் தேர்ந்தெடுக்கப் பெறுவர். பொதுவான பெரிய வீரவாகு வேடம் எட்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை சுழற்சி முறையில் ஒவ்வொரு பகுதிக்கும் கிடைத்திட வாய்ப்பு அளிக்குமாற விதிகள் வரையறுக்கப்பட்டுள்ளன. அதன்படி முறை தவறாமல் இந்த நியமங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்படும். போட்டி ஏற்படும் காலங்களில் திருவுளச்சீட்டின்படி முருகப் பெருமானின் உத்தரவுப் பெற்று நியமனம் நடக்கும்.

செங்குந்தர்கள் தறி நெசவு செய்த காலங்களில் கந்தசஷ்டி நாளின் தத்தம் தறிகளுக்கு ஓய்வு கொடுத்துவிட்டு முழுவதுமாக முருகப் பெருமான் உற்சவத் தொண்டு பணியிலேயே ஈடுபட்டு, அந்த நாளைப் புண்ணிய நாளாக ஆக்கிக் கொள்வர். இப்போதும் சஷ்டியன்று பல்வேறு வேலைகளை ஒத்தி வைத்துவிட்டு இறைபணியிலேயே ஈடுபட்டு வருகின்றனர்.

கந்த சஷ்டியன்று காலை 7.30 மணியளவில் ஸ்ரீ சபாநாயகர் கோயில் பேரம்பலத்தில் செங்குந்த மரபினர் கூடிவிடுவர். தில்லை வாழந்தணர்களும் செங்குந்த மரபினரும் பேரம்பலத்தில் அமர்ந்து திருவிழா உத்தரவு பெறுவர். பூசைக்குரிய பொருட்கள் குடை, கட்டியம் முதலியவற்றைப் பெற்றுக் கொண்டு மங்கல வாத்யம் முழங்க பகல் தீவர்த்தியுடன் தில்லை வாழந்தணர்களுடன் நாட்டாண்மைத் தலைவர்

இல்லம் வந்து சேர்வர். அங்கு மாட்சிமைமிக்க தீக்ஷிதர்களுக்குரிய சிறப்பினைச் செய்தபின் செங்குந்தர் பரிபாலனத்தில் உள்ள செங்குந்தம் பிள்ளையார் கோயில், பெருமாள் தெரு வீரனார் கோயில், செல்லியம்மன் கோயில், வீரபத்ரசாமி கோயில், செங்கட்டான் தெரு பிள்ளையார் கோயில் முதலிய கோயில்களுக்குரிய மண்டகப்படி கட்டளை அனுப்பி வைக்கப்பெறும். சஷ்டி விரதம் கடைப்பிடித்து வீரவாகு தேவர் நியமனம் பெற்ற செங்குந்தர்கள் மதியம் நாட்டாண்மைத் தலைவர் இல்லத்திற்கு வந்து உரிய முறையில் பக்தி சிரத்தைபோடு வேடமணிந்து கொள்வர். நாட்டாண்மைத் தலைவர் இல்லத்தில் பூசை அறையில் தங்கக் கிரீடங்களை வைத்து வழிபாடு செய்வர். பூசை நிறைவில் தீபாராதனைக்குப்பின் வீரவாகு தேவர்கள் அவரவர்கட்குரிய தங்கக் கிரீடங்களை நாட்டாண்மைத் தலைவர் கரங்களால் சிரசில் சூட்டப்பெறுவர். புஜங்களையும், பச்சை மாலைகளையும், நானாவித மலர் மாலைகளையும் அணிந்து கம்பீரமாக வாளாயுதத்தைக் கையில் ஏந்தி வர, மஞ்சள் பாவாடை ஆலவட்டம் வீசப் பெற, வீரவாகு தேவர்கள் நகர்வலம் நாட்டாண்மைத் தலைவர் இல்லத்திலிருந்து புறப்படும். முதல் மண்டகப்படி நாட்டாண்மைத் தலைவர் இல்லத்தில் நிகழும்.

பகவான் முதலியார் தெரு, வீரபத்ரசாமி கோயில் தெரு, வெல்லப்பிறந்த முதலியார் தெரு, சபாநாயகர் தெரு, லால்பேட்டைத் தெரு, மன்னார்குடி சாலைத் தெரு, சோமசுந்தர முதலியார் தெரு, செங்கட்டான் தெரு, மந்தகரை, திருப்பாட்டன் தெரு, சிலம்பநாதன் பிள்ளைத் தெரு, விழல்கட்டிப் பிள்ளையார் கோயில் தெரு, பெருமாள் தெரு, காசுக்கடைத் தெரு, மேலவீதி, வடக்கு வீதி, கீழவீதி வழியாக ஊர்வலம் கோயிலைச் சென்றடையும்.

நவவீரர் ஊர்வலம் மங்கல வாத்தியங்களுடன் தாரை முதலிய வாத்தியங்களும் முழங்க, மூன்று வெண்கொற்றக் குடை பொலிய சிறப்புற நிகழும். மாவிலைத் தோரணங்களுடன் ஊரே விழாக்கோலம் பூண்டிருக்கும். வழிநெடுக பக்தர்கள் அளிக்கின்ற மண்டகப்படி வழிபாடுகளைப் பெற்றுக் கொண்டு செங்குந்த நவவீரர் நகர்வலம் வந்து திருவிழாக் காலங்களில் சுவாமி புறப்பட்டுச் செல்லும், விட்ட வாசல் வழியாகக் கோயிலை அடைவர். முக்குறுணி விநாயகர், குமரக்கோட்டப் பெருமானை வணங்கித் திருவருள் பெற்று சிவகாம கோட்டத்தை அடைந்து ஞானமே வடிவாகிய சிவகாமசுந்தரி அம்மையை வணங்கி அங்கே சிறிது நேரம் இளைப்பாறி, சஷ்டி விரதம் முடித்து, சிவசிந்தையோடு வீற்றிருப்பர்.

குமரக் கோயிலில் யாக பூசைகள் நிறைவு பெற்று ஆட்டுக்கடா வாகனத்தில் சர்வ அலங்காரங்களோடு அழகு மிளிர குமரப்பெருமான் எழுந்தருள் புரிவார். அப்பெருமானுடைய சன்னதியில் தேவாசுர யுத்தத்துக்குப் புறப்படுகின்ற வீரவாகு தேவர்கள், நாரதர், கட்டியம், இயமன் ஆகியோருக்கு தீக்ஷிதர் காப்புக் கட்டி ஆசி வழங்குவார். நாதஸ்வரத்தில் மல்லாரி இசை முழங்க சகல வாத்யங்களும் ஒலிக்க தில்லை வாழந்தணர்கள், நவவீரர்கள், பக்தபெருமக்கள் புடைசூழ சிற்றம்பலத்துக்கு முன் குமரவேள் எழுந்தருள் புரிவார்.

சிவகாமி அன்னையின் திருக்கரங்களில் சார்த்தப் பெற்றிருந்த வெள்ளி வேலாகிய சக்திவேலை உற்சவ ஆச்சாரியார் ஆகிய தீக்ஷிதர் திருக்கரங்களில் ஏந்தியவண்ணம் சபைக்கு முன்னாலே வந்து நின்று பொதுமக்கள் அனைவரும் காணுமாறு தரிசனம் தருவார். பின்னர் தலைமை வீரவாகு தேவர்க்கு முருகன் வடிவம் பொறிக்கப் பெற்ற கிரீடத்திலே பட்டு சார்த்தி, நடராசப் பிரசாதமாகிய திருநீறு பூசி, தீபாராதனை செய்யப்பெறும். அஃது வீரவாகு தேவராக வந்திருக்கும் செங்குந்தருக்கு இப்பிறவியில் கிடைத்தற்கரிய பெரும் பாக்கியமாகக் கருதப்பெறும். தீக்ஷிதர் பெருமகனார் வெற்றிவேலை முருகப் பெருமான் திருக்கரத்தில் பொருத்தி மகா தீபாராதனை செய்வார். அப்போது **"வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா"** என்ற முழக்கம் விண்ணைப் பிளக்கும்.

ஆட்டுக்கடா வாகனத்தில் வலமாக வந்து தெற்கு வீதியில் அமைக்கப் பெற்றுள்ள பந்தலில் முருக பெருமான் எழுந்தருள்வார். நேர் எதிரே அமைக்கப்பட்ட பந்தலில் சூரன் வீராவேசமாகக் காட்சியளிப்பான். தெற்கு வீதியில் நற்றமிழ் வல்ல நாவலர் பெருமக்கள் கந்த புராணத்தையும், புராணத் தத்துவத்தையும் எடுத்து வைத்து சூரசம்ஹாரக் காட்சியை நேர்முக வருணனை செய்வர். இதனை மக்கள் மெய்மறந்து கேட்டும், பார்த்ததும் பரவசமடைவர்.

சூரசம்ஹார நிகழ்வின் போது வீரவாகுதேவர் சூரபதுமணிடம் தூது சென்று நல்லறிவு புகட்டும் காட்சி நிகழும். சூரன் வீரவாகு தேவர்க்குரிய ஆசனம் தராதபோது முருகப் பெருமான் திருவருளால் கனகமாமணித்தவிசு ஒன்று வான்வழியே வந்து சேரும். வீரவாகு தேவர் அதில் அமர்ந்து தூது சொல்வதாகப் புராணம் கூறும். இந்த நிகழ்ச்சியை நூலேணியில் ஏறி வீரவாகு தேவர் தூது சொல்வதாக நிகழ்த்துவர்.

முதலில் தாரகாசுரன் (யானைமுகன்) வதம் நிகழும். அடுத்து சூரனின் மகனாகிய பானுகோபனை வீரவாகு தேவர் வதம் செய்வார். அடுத்து குமரப் பெருமான் சிங்கமுகாசூரனை வதம் செய்வார். இடையில் அக்னிமுகாசுரன் என்பவன் நவவீரர்களில் எழுவரை மாய்த்துவிட சினம் கொண்ட வீரவாகு தேவர் நாரதர் மூலமாக இயமனுக்கு ஓலை போக்குவார். வீரவாகு தேவரின் ஓலைகண்ட இயமன் பதை பதைத்து போர்க்களத்துக்கு வந்து நவவீரர் எழுவரின் உயிரை மீண்டும் அளித்து அவர்களை உயிர் பெறச் செய்வான். பின் வீரவாகு தேவரைப் பணிந்து முருகப் பெருமான் திருமுன் சென்று குற்றம் பொறுத்திட வேண்டும் என வேண்டி அருள் பெறுகின்ற நிகழ்வும் சிறப்பாக நடைபெறும். இயமன் எருமை வாகனத்தில் பிரம்மாண்டமான வாத்ய ஓசை முழங்க மக்களின் உற்சாக வெள்ளத்துக்கிடையே கிங்கரர்கள் உடன்வர ஆர்ப்பாட்டமாக வருகின்ற காட்சியைக் காண்போர் மெய்சிலிர்த்துப் போவர். இந்த நிகழ்வு சூரசம்ஹாரத்தில் சிறப்பாகக் குறிக்கத்தக்க காட்சியாக அமையும். முருகனடியார்கட்கு மரணபயம் இல்லை என்பது தத்துவம்.

இறுதியாக சூரபத்மன் வதம் நிகழும். சூரபத்மன் முருகப் பெருமானை வலமாக வந்து பெருவாழ்வு பெறுவான். மயிலும், சேவலுமாக வந்த சூரனை முருகன் வாகனமாகவும், கொடியாகவும் ஏற்று அருள்புரிவார்.

சூரசம்ஹாரம் முடிந்ததும் வெள்ளி மயில்வாகனத்தில் முருகப் பெருமான் எழுந்தருள்வார். மகா தீபாராதனை நிகழும். எல்லோர்க்கும் பிரசாதம் வழங்கப்பெறும். பின்னர் தில்லை வாழந்தணர் செங்குந்தநவவீரர் புடைசூழ திருவீதி வலமாக வந்து குமரப் பெருமான் பேரம்பலத்தை அடைவார். அங்கு முறைப்படி காப்பு களையப் பெற்ற பின் வீரவாகு தேவர்கள் ஊர்வலமாக நாட்டாண்மைத் தலைவர் இல்லத்தை வந்தடைவர். அங்கு ஆரத்தி எடுத்து, சூரைக்காய் விடலைவிட்டு அனைவரும் வரவேற்கப் பெறுவர். முருகப் பெருமான் பிரசாதங்கள் வழங்கப் பெறும். அவற்றை அருந்தி வீரவாகு தேவர்கள் விரதம் முடிப்பர்.

அடுத்தநாள் மாலை பேரம்பலத்தில் வேடமங்கை வேழமங்கை உடனாகிய வேலவர் திருக்கல்யாண வைபவம் நடைபெறும். அனைவருக்கும் விருந்தோம்பல் நிகழும். பின்னர் முருகப் பெருமான் ஊர்வலம் வந்து குமரக் கோட்டத்திற்கு எழுந்தருள்வார். காப்பு களைதல் நடைபெறும். அடுத்தநாள் காலையில் வெள்ளி மயில்வாகனத்தில் வள்ளி தேவசேனா சமேதராக முருகப் பெருமான் திருவீதி வலம் வந்து அருள்பாலிப்பார். இத்துடன் கந்தசஷ்டி சூரசம்ஹார உற்சவம் நிறைவு பெறும்.

**திருக்கார்த்திகை தீபம் :**

அடுத்து வருகின்ற கார்த்திகை மாதத்து சர்வாலய தீபத்திருநாளில் நடராஜர் சபைக்கு முன்னால் கம்பவிளக்கு தீபமேற்றுகின்ற உற்சவம் நிகழும். தொடர்ந்து குமரக்கோயிலுக்கு முன் கூம்பு வடிவில் அமைக்கப் பெற்றுள்ள சொக்கர்பனையை சுடர்விட்டு எரியுமாறு செய்வர். முருகப் பெருமானுக்கு நிவேதனம் செய்யப்பெற்ற அவல் பொரி விநியோகம் செய்யப்படும். அமரர். **ராசுவேலு செங்குந்தர்** அவர்களின் குமாரர்கள் சிவத்திரு. **R. மணி செங்குந்தர்**, சிவத்திரு. **R. சிவகுமார் செங்குந்தர்** ஆகியோர் செங்குந்த மரபினர் சார்பான கோயில் பணிகளை ஈடுபாட்டோடு தொடர்ந்து செய்து வருகின்றனர். இவர்களின் தொண்டு பாராட்டுதற்கு உரியது.

இவ்வாறு சிதம்பரம் தெற்குத் தெரு செங்குந்தர் நாட்டாண்மைத் தலைவர் மற்றும் டிரஸ்டியாகிய சிவத்திரு.டாக்டர். **தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்களும், செங்குந்த மரபினரும் உலகத்துயிர்கள் யாவையும் உய்யும் பொருட்டு இந்த உற்சவங்களை ஆண்டுதோறும் இனிதே நிகழ்த்தி திருவருளால் இகபர நலன்களைப் பெற்றுச் சிறக்கின்றனர். இவர்களின் ஆன்மிக அருட்பணி மேன்மேலும் சிறக்க அவனருளாலே அவன்தாள் வாழ்த்தி வணங்குகிறோம்.

## திருப்புகழ் அமிர்தம்

### உயிர்க்கு ஆதரவு அருள்

உம்பர்தருத் தேநுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே.

### தீராத நோய்கள் தீர

இருமலு ரோக முயலகன் வாத
மெரிகுண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை யிவையோடே
பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிறவிகள் தோறு மெனைநலி யாத
படியுன தாள்கள் அருள்வாயே
வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியஅ நேக இசைபாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.

### விரைவில் விவாஹம் நடைபெற

விறல்மார னைந்து மலர்வாளி
சிந்த மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ
மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாள

மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா
அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே.

## ஞானம் பெற

சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலு
மடியேனை அஞ்சலென வரவேணும்
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
நவநீத முந்திருடி உரலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே
நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே
தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சு கதிர் வடிவேலா
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே.

## வீடு, மனை பெற

அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ்மீற வருளாலே
அந்தரியோ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனு முமையாளு மகிழ்வாக
மண்டலமு முநிவோரு மெண்டிசையி லுளபேரு
மஞ்சினனு மயனாரு மெதிர்காண
மங்கையுட னரிதானு மின்பமுற மகிழ்கூற
மைந்துமயி லுடனாடி வரவேணும்
புண்டரிக விழியான அண்டர்மகள் மணவாள
புந்திநிறை யறிவாள வுயர்தோளா
பொங்குகட லுனநாகம் விண்டுவரை யிகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா
தண்டரள மணிமார்ப செம்பொனெழில் செறிரூப
தண்டமிழின் மிகுநேய முருகேசா
சந்ததமு மடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே.

# திருமுருகவேள் பன்னிரு திருமுறைகள்

சிவபெருமானுக்கு உரிய பன்னிரு திருமுறைகளுக்கு ஒப்பனவாக, முருகவேளுக்கும் உரிய பன்னிரு திருமுறைகளாவன.

**1 முதல் 7 திருமுறைகள் :**

ஆறுபடை வீட்டுத் திருப்புகழ்ப் பாடல்கள், ஆறு திருமுறைகள்.

பிற தலங்களின் திருப்புகழும், பொதுத் திருப்புகழும் ஏழாந் திருமுறை.

**8 ஆம் திருமுறை :**

கந்தரலங்காரமும், அகப்பொருள் அமைந்த கந்தர் அந்தாதியும் எட்டாந் திருமுறை.

**9 ஆம் திருமுறை :**

இசைப்பாடலாம் திருவகுப்பு ஒன்பதாந் திருமுறை.

**10 ஆம் திருமுறை :**

மந்திர நூலாம் கந்தர் அனுபூதி பத்தாந் திருமுறை.

**11 ஆம் திருமுறை :**

முருகவேளுக்கு உரிய பழைய அடியார்கள் பலர் பாடினவற்றுள் திரட்டப்பட்ட பகுதிகள் பதினோறாந் திருமுறை.

**12 ஆம் திருமுறை :**

முருகவேள் தொண்டர்களின் புராணம்

**"சேய்த் தொண்டர் புராணம்"**

(தேனூர் வரகவி சொக்கலிங்கம் பிள்ளையவர்கள் பாடியது)

பன்னிரு திருமுறைகளிலும் பன்னிரண்டு பாடல்கள் பாடி ஸ்ரீ முருகப் பெருமான் திருவருள் பெற்று வாழ்வாங்கு வாழ்வோமாக!





"இரை தேடுவதோடு, இறையுந்தேடு"

அருள்மொழியரசு
குகஸ்ரீ.திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

## வாரி வழங்கும் வாரியார்

வேறியார் உரைத்த போதும் வரிப்பன கருங்கும், மேலும்
மாறியும் திரிந்தும் சொல்லில் மற்றொன்று விரிந்தும் நிற்கும்
கூறுமோர் பொருளையெல்லாம் குறையிலாதுரைக்கும் வள்ளல்
வாரியார் ஒருவரேதான் வையமே சாட்சி சொல்லும்.

கழுத்திலே ருத்திராட்சம் கையிலேமாலை, ஐந்தே எழுத்திலே
இதயம் ஆறுமுகத்திலே இளகும் பக்தி
அழுத்தமாய் உடையார் என்றும் அதிலொரு களங்கமில்லை
வழுத்தினால் தும்முவார் நாம் தும்மினால் வழுத்துவார்காண்.

மீனாட்சி என்ற சொல்லை விரிவுரை செய்வார் அங்கே
தானாட்சி செய்யும் எங்கள் தமிழாட்சி என்னென்பேன் யான்
ஊனாட்சி செய்யும் மாந்தர் உயிராட்சி கொள்ளும் இன்ப(த்)
தேனாட்சி வாரியார்க்கே சிறப்பான ஆட்சியன்றோ.

தாமரைக் கண்ணினாலே தையலார் மிதிலை மாந்தர்
ராமனை நோக்கும் போழ்தில் நாமதை நோக்கும் வண்ணம்
காமனை பக்தியோடும் கலந்தவர் காட்டுவார் காண்
நாமகன் கம்பன் கேட்டால் நமக்கிவர் 'வாரி' சென்பான்.

வேலாயுதத்தின் சக்தி விரிப்பர் பரமன் கொண்டு
சூலாயுதத்தின் சக்தி துடிப்புடன் உரைக்கும் போதும்
நூலாயுதங்கள் தேர்ந்து நுண்பொருள் கூறும் போதும்
நாலாயுதங்கள் கொண்ட நங்கையும் தனை மறப்பாள்

மாரியோ சில நாள் பெய்யும் மலர்களோ சில நாள் பூக்கும்
ஏரியோ சிலநாள் தண்ணீர் இல்லாமல் இருக்கும்
வாரியார் என்னும் எங்கள் வள்ளலின் மனமோ நித்தம்
வாரியும் வளரும் என்றால் மற்றொரு வார்த்தையேனோ?

- கவியரசு கண்ணதாசன்

# குன்றுதோறாடும் குமரன் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் எழுந்தருளி அருள்பாலிக்கும் திருக்கோயில்கள்

| கோயில் பெயர் | மாவட்டம் | ஊர் |
|---|---|---|
| அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில் | சென்னை | கந்தக்கோட்டம் |
| அருள்மிகு கல்யாண கந்தசுவாமி திருக்கோயில் | சென்னை | மடிப்பாக்கம் |
| அருள்மிகு சிவசுப்பிரமணியர் திருக்கோயில் | சென்னை | மேற்கு சைதாப்பேட்டை |
| அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில் | சென்னை | கந்தாஸ்ரமம் |
| அருள்மிகு திருமால் மருகன் திருக்கோயில் | சென்னை | பழவந்தாங்கல் |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | சென்னை | குமரன்குன்றம் |
| அருள்மிகு வடபழநி ஆண்டவர் திருக்கோயில் | சென்னை | வடபழநி |
| அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயில் | திருவள்ளூர் | திருத்தணி |
| அருள்மிகு சுப்பிரமணியர் திருக்கோயில் | திருவள்ளூர் | அம்மையார்குப்பம் |
| அருள்மிகு சுவாமிநாத பாலமுருகன் திருக்கோயில் | திருவள்ளூர் | வானகரம் |
| அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | திருவள்ளூர் | ஆண்டார்குப்பம் |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | திருவள்ளூர் | சிறுவாபுரி, சின்னம்பேடு |
| அருள்மிகு குமரக்கோட்டம் முருகன் திருக்கோயில் | காஞ்சிபுரம் | காஞ்சிபுரம் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | காஞ்சிபுரம் | குன்றத்தூர் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | காஞ்சிபுரம் | வல்லக்கோட்டை |
| அருள்மிகு பாலசுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | காஞ்சிபுரம் | இளையனார்வேலூர் |
| அருள்மிகு பாலசுப்பிரமணியன் திருக்கோயில் | காஞ்சிபுரம் | உத்திரமேரூர் |
| அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில் | காஞ்சிபுரம் | திருப்போரூர் |
| அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில் | காஞ்சிபுரம் | செய்யூர் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | வேலூர் | காங்கேயநல்லூர் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | வேலூர் | வள்ளிமலை |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | வேலூர் | ரத்தினகிரி |
| அருள்மிகு சுப்பிரமணியர் திருக்கோயில் | திருவண்ணாமலை | செங்கம், வில்வாரணி |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | விழுப்புரம் | கிருஷ்ணாபுரம் |
| அருள்மிகு எட்டுக்குடி முருகன் திருக்கோயில் | நாகப்பட்டினம் | எட்டுக்குடி |
| அருள்மிகு கதிர்காம பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | நாகப்பட்டினம் | கைவிளாஞ்சேரி |
| அருள்மிகு குமரன் திருக்கோயில் | நாகப்பட்டினம் | நாகப்பட்டினம் |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | நாகப்பட்டினம் | பெரம்பூர் |
| அருள்மிகு பழநியாண்டீஸ்வரர் திருக்கோயில் | நாகப்பட்டினம் | சீர்காழி |
| அருள்மிகு முருகன் திருக்கோயில் | நாகப்பட்டினம் | திருவிடைகழி |
| அருள்மிகு குமாரசாமி திருக்கோயில் | திருவாரூர் | தேவர் கண்டநல்லூர் |
| அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயில் | திருவாரூர் | எண்கண் |
| அருள்மிகு பழநி ஆண்டவர் திருக்கோயில் | திருவாரூர் | திருவாரூர் |
| அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில் | தஞ்சாவூர் | சுவாமிமலை |

| கோயில் பெயர் | மாவட்டம் | ஊர் |
|---|---|---|
| அருள்மிகு பாலசுப்ரமணியன் திருக்கோயில் | அரியலூர் | அரியலூர் |
| அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் | பெரம்பலூர் | செட்டிகுளம் |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | கரூர் | வெண்ணெய் மலை |
| அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கரூர் | வேலாயுதம்பாளையம் |
| அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கரூர் | பாலமலை |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | திருச்சி | குமாரவயலூர் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | திருச்சி | மணக்கால் |
| அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில் | நாமக்கல் | குருசாமிபாளையம் |
| அருள்மிகு பழனியப்பர் திருக்கோயில் | நாமக்கல் | பேளுக்குறிச்சி |
| அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | நாமக்கல் | மோகனூர் |
| அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | நாமக்கல் | கபிலர்மலை |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | நாமக்கல் | அலவாய்ப்பட்டி |
| அருள்மிகு கந்தாஸ்ரமம் திருக்கோயில் | சேலம் | உடையாபட்டி |
| அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் | சேலம் | குமரகிரி |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | சேலம் ஊத்துமலை | சீலநாயக்கன்பட்டி, |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | சேலம் | வடசென்னிமலை |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | சேலம் | கஞ்சமலை |
| அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில் | தர்மபுரி | குமாரசாமி பேட்டை |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கிருஷ்ணகிரி | காட்டினாயனப்பள்ளி |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | கிருஷ்ணகிரி | அகரம் |
| அருள்மிகு கனகாசல குமரன் திருக்கோயில் | ஈரோடு | எழுமாத்தூர் |
| அருள்மிகு சண்முகநாதர் திருக்கோயில் | ஈரோடு | பச்சை மலை |
| அருள்மிகு சுப்பரமணிய சுவாமி திருக்கோயில் | ஈரோடு | பச்சை மலை |
| அருள்மிகு சுப்பரமணியசுவாமி திருக்கோயில் | ஈரோடு | சென்னிமலை |
| அருள்மிகு பால தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | ஈரோடு | கோபி |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | ஈரோடு | கொருமடுவு |
| அருள்மிகு முத்து வேலாயுத சுவாமி திருக்கோயில் | ஈரோடு | உதயகிரி |
| அருள்மிகு முத்துகுமார சுவாமி திருக்கோயில் | ஈரோடு | பவளமலை |
| அருள்மிகு முத்துவேலாயுத சுவாமி திருக்கோயில் | ஈரோடு | மலையப்பப்பாளையம் |
| அருள்மிகு வெற்றி வேலாயுதசுவாமி திருக்கோயில் | ஈரோடு | கதித்த மலை |
| அருள்மிகு வேலாயுத சுவாமி திருக்கோயில் | ஈரோடு | திண்டல்மலை |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | திருப்பூர் | சிவன்மலை, காங்கேயம் |
| அருள்மிகு ஞான தண்டாயுதபாணி திருக்கோயில் | திருப்பூர் | பாப்பன் குளம் |
| அருள்மிகு முத்துக்குமார சுவாமி திருக்கோயில் | திருப்பூர் | வட்டமலை |
| அருள்மிகு அருள் முருகன் திருக்கோயில் | கோயம்புத்தூர் | போத்தனூர் |
| அருள்மிகு உத்தண்ட வேலாயுத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | ஊதியூர் |

| கோயில் பெயர் | மாவட்டம் | ஊர் |
|---|---|---|
| அருள்மிகு ஓதிமலையாண்டவர் திருக்கோயில் | கோயம்புத்தூர் | இரும்பறை |
| அருள்மிகு கல்யாண சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | குமரன் குன்று |
| அருள்மிகு குமார சுப்பிரமணியர் திருக்கோயில் | கோயம்புத்தூர் | ஓதிமலை |
| அருள்மிகு குழந்தை வேலாயுத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | மருதூர் |
| அருள்மிகு குழந்தை வேலாயுத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | சொர்ணமலை |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | பொள்ளாச்சி |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | மருதமலை |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | அனுவாவி |
| அருள்மிகு சுவாமி நாத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | குமரன் கோட்டம் |
| அருள்மிகு தண்டபாணிசுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | சின்னவேடம்பட்டி |
| அருள்மிகு திருச்செந்தில் ஆண்டவர் (கச்சியப்பர் மடாலயம்) திருக்கோயில் | கோயம்புத்தூர் | கோயம்புத்தூர் |
| அருள்மிகு பழநியாண்டவர் திருக்கோயில் | கோயம்புத்தூர் | சாலையூர் |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | கோயம்புத்தூர் | எலகம்பாளையம் |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | கோயம்புத்தூர் | கோட்டுப்புள்ளாம் பாளையம் |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | கோயம்புத்தூர் | குனியமுத்தூர் |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | கோயம்புத்தூர் | சென்னாமலை |
| அருள்மிகு முத்து குமார சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | மாதப்பூர் |
| அருள்மிகு முத்துமலை முருகன் திருக்கோயில் | கோயம்புத்தூர் | கிணத்துக்கடவு |
| அருள்மிகு முருகன் திருக்கோயில் | கோயம்புத்தூர் | வேல்கோட்டம் |
| அருள்மிகு ரத்தினகிரி முருகன் திருக்கோயில் | கோயம்புத்தூர் | சரவணம்பட்டி |
| அருள்மிகு வட்டமலை ஆண்டவர் திருக்கோயில் | கோயம்புத்தூர் | அன்னூர |
| அருள்மிகு வேதாயுத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | செஞ்சேரி |
| அருள்மிகு வேலாயுத சுவாமி திருக்கோயில் | கோயம்புத்தூர் | கிணத்துக்கடவு |
| அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி திருக்கோயில் | நீலகிரி | குன்னூர் |
| அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | நீலகிரி | மஞ்சூர் |
| அருள்மிகு பால தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | நீலகிரி | எல்க்மலை |
| அருள்மிகு வெற்றிவேல் முருகன் திருக்கோயில் | நீலகிரி | கோத்தகிரி |
| அருள்மிகு சண்முகநாதர் திருக்கோயில் | புதுக்கோட்டை | விராலிமலை |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | புதுக்கோட்டை | கண்ணனூர் |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | புதுக்கோட்டை | குமரமலை |
| அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில் | புதுக்கோட்டை | தபசுமலை |
| அருள்மிகு குழந்தை வேலப்பர் திருக்கோயில் | திண்டுக்கல் | ஐவர் மலை, பழநி |
| அருள்மிகு குழந்தை வேலப்பர் திருக்கோயில் | திண்டுக்கல் | பூம்பாறை, கொடைக்கானல் |
| அருள்மிகு சதுர்முக முருகன் திருக்கோயில் | திண்டுக்கல் | சின்னாளப்பட்டி |
| அருள்மிகு சுப்பரமணியசுவாமி திருக்கோயில் | திண்டுக்கல் | திருமலைக்கேணி |
| அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் | திண்டுக்கல் | ஆர்.வி.நகர் |
| அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் | திண்டுக்கல் | திண்டுக்கல் |

| கோயில் பெயர் | மாவட்டம் | ஊர் |
|---|---|---|
| அருள்மிகு தண்டாயுதபாணி (குழந்தை வேலாயுதர்) திருக்கோயில் | திண்டுக்கல் | பழநி |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | திண்டுக்கல் | தாண்டிக்குடி |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | மதுரை | சோலைமலை |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | மதுரை | புத்தூர், உசிலம்பட்டி |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | மதுரை | திருப்பரங்குன்றம் |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | மதுரை | பேரையூர் |
| அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | மதுரை | நேதாஜி ரோடு |
| அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில் | மதுரை | ஹார்விபட்டி |
| அருள்மிகு மாதாந்த சுப்பரமணிய சுவாமி திருக்கோயில் | மதுரை | எழுமலை |
| அருள்மிகு ஆறுமுக நயினார் திருக்கோயில் | தேனி | கோடாங்கிபட்டி தீர்த்த தொட்டி |
| அருள்மிகு சுருளிவேலப்பர் திருக்கோயில் | தேனி | சுருளிமலை |
| அருள்மிகு மாவூற்று வேலப்பர் திருக்கோயில் | தேனி | தெப்பம்பட்டி |
| அருள்மிகு சண்முகநாதர் திருக்கோயில் | சிவகங்கை | குன்றக்குடி |
| அருள்மிகு சுப்பிரமணியர் திருக்கோயில் | சிவகங்கை | கோவனூர் |
| அருள்மிகு கருநெல்லிநாத சுவாமி திருக்கோயில் | விருதுநகர் | திருத்தங்கல் |
| அருள்மிகு கரைமேல் முருகையன்னார் திருக்கோயில் | விருதுநகர் | வீரக்குடி |
| அருள்மிகு சிவ சுப்பரமணியசுவாமி (ரணபலி முருகன்) திருக்கோயில் | ராமநாதபுரம் | பெருவயல் |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி (குமரக்கடவுள்) திருக்கோயில் | ராமநாதபுரம் | மேலக்கொடுமலூர |
| அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில் | ராமநாதபுரம் | குண்டுக்கரை |
| அருள்மிகு வழிவிடும் முருகன் திருக்கோயில் | ராமநாதபுரம் | ராமநாதபுரம் |
| அருள்மிகு இலஞ்சிக்குமாரர் திருக்கோயில் | திருநெல்வேலி | இலஞ்சி |
| அருள்மிகு திருமலை முத்துக்குமாரசுவாமி திருக்கோயில் | திருநெல்வேலி | பண்பொழி |
| அருள்மிகு தோரணமலை முருகன் திருக்கோயில் | திருநெல்வேலி | தோரணமலை |
| அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | திருநெல்வேலி | சிவகிரி |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | திருநெல்வேலி | ஆய்க்குடி |
| அருள்மிகு பாலசுப்பிரமணியர் திருக்கோயில் | திருநெல்வேலி | கொழுந்துமாமலை |
| அருள்மிகு கழுகாசலமூர்த்தி திருக்கோயில் | தூத்துக்குடி | கழுகுமலை |
| அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் | தூத்துக்குடி | திருச்செந்தூர் |
| அருள்மிகு நதிக்கரை முருகன் திருக்கோயில் | தூத்துக்குடி | ஸ்ரீவைகுண்டம் |
| அருள்மிகு குமார சுவாமி திருக்கோயில் | கன்னியாகுமாரி | குமார கோயில் |
| அருள்மிகு சுப்பரமணிய சுவாமி (திருமலை அமரர் பதிகாத்த நயினார்) திருக்கோயில் | கன்னியாகுமாரி | தோவாளை |
| அருள்மிகு சுப்பரமணியர் திருக்கோயில் | கன்னியாகுமாரி | மருங்கூர் |

| கோயில் பெயர் | மாவட்டம் | ஊர் |
|---|---|---|
| அருள்மிகு கொளஞ்சியப்பர் திருக்கோயில் | கடலூர் | மணவாளநல்லூர், விருத்தாசலம் |
| அருள்மிகு சிவசுப்பரமணிய சுவாமி திருக்கோயில் | கடலூர் | புதுவண்டிப்பாளையம் |
| அருள்மிகு சிவசுப்பிரமணியசாமி திருக்கோயில் | கடலூர் | வில்லுடையான் பட்டு |
| அருள்மிகு முத்துக்குமர சுவாமி திருக்கோயில் | கடலூர் | பரங்கிப்பேட்டை |
| அருள்மிகு வெற்றிவேல் முருகன் திருக்கோயில் | கடலூர் | சி.மாணம்பாடி |
| அருள்மிகு வேடப்பர் திருக்கோயில் | கடலூர் | விருத்தாசலம்அருள்மிகு |
| குமரக்கோட்டம் குமரன்கோயில் | கடலூர் | சிதம்பரம் |
| பாண்டியநாயகம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் | கடலூர் | சிதம்பரம் |
| அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் | கடலூர் | சிதம்பரம் |
| அறுபடை வீடு அமையப் பெற்ற பாம்பன் சுவாமிகள் மடாலயக்கோயில் | கடலூர் | சிதம்பரம் |
| ஸ்ரீ சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில் (உத்தர தணிகை) | கடலூர் | விலங்கல்பட்டு |
| ஆறுமுக சுவாமி கோயில் (சிவத்திரு ஞானியார் மடாலயம்) | கடலூர் | திருப்பாதிரிப்புலியூர் |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கடலூர் | புதுப்பாளையம் |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் (சண்முககோட்டம்) | கடலூர் | புருகீசுபேட்டை |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் | கடலூர் | பெருமாத்தூர், புவனகிரி |
| அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் (சுப்புராயர் கோயில்) | கடலூர் | குறிஞ்சிப்பாடி |
| அருள்மிகு ஸ்ரீ செல்வச் சிங்காரவேலர் (சுப்புராயர் கோயில் உற்சவர்) | கடலூர் | சிங்கபுரி, விழப்பள்ளம் |

நன்றி !

தொகுப்பு : **S.V.மூர்த்தி செங்குந்தர்**
காஞ்சிபுரம்

*****************

## சிவபெருமான் வணக்கம்

உலகெலாம் உணர்ந்(து) ஓதற்(கு) அரியவன்;
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன்; அம்பலத்(து) ஆடுவான்;
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் – சேக்கிழார்

திருச்சிற்றம்பலம்

## தில்லை அம்பலவாணரை வழிபட்டுப் பேறுபெற்றோர்

1. முத்துக்குமரப் பெருமான்
2. அருச்சுனன்
3. திருமூல நாயனார்
4. திருஞானசம்பந்தர்
5. திருநாவுக்கரசர்
6. சுந்தரர்
7. மணிவாசகர்
8. சேந்தனார்
9. ஐயடிகள் காடவர்கோன்
10. சேரமான் பெருமாள் நாயனார்
11. நக்கீரதேவ நாயனார்
12. பரணதேவ நாயனார்
13. திருவெண்காட்டடிகள் (பட்டினத்தார்)
14. நம்பியாண்டார் நம்பிகள்
15. சேக்கிழார்
16. தில்லைவாழந்தணர்
17. திருநீலகண்ட நாயனார்
18. திருநாளைப்போவார் நாயனார் (நந்தனார்)
19. கூற்றுவ நாயனார்
20. கணம்புல்ல நாயனார்
21. கோச்செங்கட்சோழ நாயனார்
22. முதல் வரகுணபாண்டியன்
23. திருவதிகை மனவாசகம் கடந்தார்
24. உமாபதி சிவாச்சாரியார் (சந்தானகுரவர்)
25. அருணகிரிநாதர்
26. இரட்டைப் புலவர்கள் (இளஞ்சூரியர் முதுசூரியர்)
27. குருஞானசம்பந்தர்
28. கண்கட்டி மறைஞானசம்பந்தர்
29. குமரகுருபரர்
30. வெள்ளியம்பலவாணர்
31. படிக்காசுத்தம்பிரான்
32. சித்தர் சிவப்பிகாசர்
33. அகோர சிவாச்சாரியார்
34. தாயுமானவர்
35. குகை நமச்சிவாயார்
36. குருநமச்சிவாயார்
37. மறைஞான சம்பந்தர் (சந்தானகுரவர்)
38. மாரிமுத்துப் புலவர்
39. முத்துத்தாண்டவர்
40. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை
41. தவத்திரு ஆறுமுகநாவலர் பெருமான்
42. திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க வள்ளலார்
43. பாம்பன் குமரகுருதாஸ சுவாமிகள்
44. ஞானப்பிரகாசர் (யாழ்ப்பாணம்)
45. கோபாலகிருஷ்ண பாரதியார்
46. மணவை முனுசாமி
47. தவத்திரு. ஞானியாரடிகள்
48. திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்
49. தவத்திரு. மௌன சபாபதி சுவாமிகள் (மௌன மடாலயம்)
50. பேராசிரியர். க. வெள்ளைவாரணனார்

# நவவீரர் பாடல்கள்

## நவரத்தின கலிவிருத்தம்

### வீரவாகு தேவர் - மாணிக்கம்

சீர றாமுருக வேளுறை செழுமை
ஆர றாநிலய வாரிய லமரேண்
நார றாவுழுவ லேறிடு நலிவில்
வீர வாகுவெனும் வீரனை விழைவாம்.

### வீரகேசரி தேவர் - தரளம்

என்னை யாளிறை யாயுல கெங்கணும்
மன்னு கந்தபி ரான்மந்தி ரத்திடை
மின்னு வாழ்க்கைய றாவீர கேசரி
தன்னை யுள்ளன்பிற் றாழ்வர்க்கின் றாழலே.

### வீரமகேந்திர தேவர் - புட்பராகம்

ஓதரும் வீரம கேந்திர னொருவன்
பாதமு ளேபடர் மாநதர பரமீ
ஆதரம் வீயம தாந்தரங் கருதுஞ்
சூரம காமர மீர்ந்ததோ மரவேள்.

### வீரமகேச தேவர் - கோமேதகம்

அரணத் திறைையோ னையனா ரதமேன்
கரணத் தெனுவார் கவனூ றிடுவான்
முரணிற் பொருசூ ரனொடே முனைவோன்
சரணச் சுகவீ ரமகே சனரோ.

### வீரபுரந்தர தேவர் - வைடூரியம்

திகையெலா நீக்கமி லாது செறிந்தபெருந்
தகையெலா மேற்றவிர் சாமி பதம்பரவாப்
பகையெலா நீக்கொரு பாடு பிறந்துளுவார்
மிகையெலாம் வீட்டிடும் வீர புரந்தரனே.

## வீரராக்கத தேவர் - வயிரம்

வீவயன மிலாமேல் வீட்டுநெறியயை நேடும்
ஆவலறவர் வாழ்வா னாட்டுமுருக வேளின்
தாவிலருள்கொள் வீர ராக்கதனடி தாழ்வார்
தேவருமறி யாவோர் சீர்த்தியலுயர் வாரால்.

## வீரமார்த்தாண்ட தேவர் - மரகதம்

தாமத மெற்றிடு மாசில் சார்ச்சேந்தன்
சேமவ டிக்களி யாமொர் சீர்ச்சார்ந்தோர்
மாமிடன் மிக்குடை வீர மார்த்தாண்டன்
பூமன நச்சுநர் போதம் போய்க்காண்பார்.

## வீராந்தக தேவர் - பவளம்

மள்ளலே றேண்சிகி யிவரு மஞ்சனை
உள்ளுவோ ரோங்வ னுணர்வு சந்ததங்
கொள்ளுவீ ராந்தக னினைவு கொண்டிடின்
தள்ளுவார் காண்கணத் தறுகண் யாவையும்.

## வீரதீர தேவர் - நீலம்

ஆரெப்படி முனினும்மது போலத்திரு வருள்கூர்
நாரப்பெரு மானாயழ னாகப்பெய ரானாள்
தாராப்பொருள் வேலற்பணி தகைமைக்குண வீர
தீரப்பெய ரோனைப்புகழ் தெருளர்க்கிலை சிறுகே.

நன்றி !

- ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்த ஜன சபை
நூற்றாண்டு விழா (1915 - 2015) மலர்
சென்னை

# மேலைக் கோபுர வாசலில் மேவிய ஸ்ரீ செல்வ முத்துக்குமார ஸ்வாமி

சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயிலில் மேலைக் கோபுர வாசலில் கிழக்கு நோக்கி எழுந்தருள் புரிகின்றார் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரப் பெருமான். குமரகோட்டம் என்று வழங்கப்பெறும் இக்கோயிலில் வேழமங்கை வேடமங்கை உடனாக மயில் வாகனத்தில் எழுந்தருளும் அழகுக் கோலம் காணக் கண்கோடி வேண்டும். குமார சுப்ரமண்யராக விளங்கும் இப்பெருமானை **"மேலைக்கோபுர வாசலில் மேவிய பெருமானே"** என்று அருணகிரிப் பெருமான் பாடுகிறார். **'தாது மாமலர் முடியாலே"** என்று தொடங்கும் திருப்புகழில் "வேதத்தில் சொல்லப் பெற்ற முறையில் சிறிதும் தவறாமல் நாள்தோறும் வேள்விகள், யாகங்கள், ஆராதனைகள் செய்யும் எழில்பூண்ட மூவாயிரம் மேன்மை வேதியர்களாகிய தில்லை வாழந்தணர்களின் பூசையில் மகிழ்ந்தருளும் பெருமான்" என்று அருணகிரிநாதர் பாடிப் பரவியுள்ளார்.

**வேதநூன் முறை வழுவாமே தினம்**

**வேள்வி யாலெழில் புனைமூ வாயிர**

**மேன்மை வேதியர் மிகலே பூசனை – புரிகோவே**

**விறு சேர்வரை யரகாய் மேவிய**

**மேரு மால்வரை யெனநீள் கோபுர**

**மேலை வாயிலின் மயில்மீ தேறிய – பெருமாளே**

என்பன அவ்வரிய திருப்புகழ்ப் பாடலடிகளாம்.

தில்லை வாழந்தணர்களின் நிர்வாகத்திற்குட்பட்ட ஸ்ரீ சபாநாயகர் கோயிலில் மேற்குப் பிரகாரத்திலுள்ள ஸ்ரீ குமரகோட்டம் ஆகிய இக்கோயில் இப்போது சிதம்பரம் தெற்குத்தெரு செங்குந்தர் பரம்பரை நாட்டாண்மைத் தலைவர். சிவத்திரு. **தில்லை ராஜ் நடராஜன் செங்குந்தர்** அவர்களால் புதுப்பிக்கப்பட்டு, திருப்பணிகள் நிறைவு பெற்று **11.02.2019 – திங்கள்கிழமை** அன்று **மகா கும்பாபிஷேகம்** கண்டு பொலிகின்றது.

சிதம்பரத்தில் மேல் பிரகாரத்திலுள்ள தனிக்கோயிலில் முருகவேள் எழுந்தருளியிருக்கிறார். இக்கோயிலை இன்றும் செங்குந்தர்கள் பரிபாலித்துக் கந்தர் சஷ்டி விழா முதலிய நித்திய நைமித்தியங்களைச் செய்து வருகின்றார்கள் என்று திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் சிதம்பரம் திருப்புகழ் விரிவுரை நூலில் குறித்துள்ளமை இங்கு நினைந்து மகிழத்தக்கதாம்.

**– பதிப்பாசிரியன்**

# திருக்குடமுழுக்கு வாழ்த்தியல்
## போற்றி வணக்கம்

- பேராசிரியர். தமிழாகரர்.
முனைவர். **தெ. முருகசாமி** அவர்கள்
புதுச்சேரி

திருச்சிற்றம்பலம்

தில்லைப் பதியின் திருத்தகு மேற்குவாயில்
எல்லைப் பெருமானாய் வீற்றிருக்கும் - நல்லைபுகழ்
செல்வ முத்துக் கோலமுருகன் திருக்கோயில்
நல்லகுட நன்னீர்க்கு வாழ்த்து !

அற்றைநாள் வந்து தொடர் நிகழ்வினைப்
பற்றுடன் காணப் பரவசமாய் - உற்ற
முருகன் அருளுடன் மூத்த நட ராசர்
அருளும் பெறுவேன் அறிந்து.

## மங்கல வாழ்த்து

முகிலினம் முறையில் பெய்க
முநிக்குலஞ் சிறக்க மன்னர்
சுகிர்த நல் நெறிகள் ஓங்க
சுகம்பெற உயிர்கள் எல்லாம்
மகிழ்வுறச் சுரபி மல்க
மறைமுறை மகம் தழைக்க
மகிதலம் முழுதும் சைவ
வளமுற சமயம் வாழ்க!

– திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்

ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க, வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க, செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானை தன் அணங்கு வாழ்க,
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்க சீரடியார் எல்லாம்



# செங்குந்தர் கைக்கோள முதலியார் இன முன்னோர்கள்

## முருகனின் போர் படை தளபதிகளான செங்குந்த நவவீரர்கள்



